. லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவிவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.






அறிவைப்பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

புத்தகம் 10.] 1901௵ ஆகஸ்டு௴ [இலக்கம் 4.


## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As.: Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *7s. 6d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People:—

SUBSCRN. PRICE: YEARLY RS. 4; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. 5½ AS.; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *5s. 6d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and save vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வா[illegible]த்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது எப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுத வேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

## லௌகீக வைதீக வித்தை.

### மெய்யுணர்வு முக்கியம்.

தற்காலம் இந்தியாவில் அங்கிலேய கவர்ன்மெண்டாருடைய மேற்பார்வையின் கீழ் ஏற்பட்டுள்ள வித்யாசாலைகளில் வைதீகவித்தையின்றி லௌகீக வித்தைமட்டும் கற்றுக்கொடுக்கப்பட்டு வருகின்றபடியால் அவ்வித்தியாசாலைகளில் கற்றுத்தேறிய வாலிபர்கள் வைதீகப்பயிற்சியின்மையால் தெய்வபக்தியின்றி, தெய்வபக்தியாதாரமாக வுண்டாகும் சத்குணங்களும் விளங்காமல் பாழாகி விடுகிறார்களென்று அனேகர் வெகுநாளாக முறையிட்டு வருகிறார்கள். இந்த முறையிடு சமீபகாலத்தில் மிக அதிகமாகக்கேட்கப்பட்டுவருகிறது கல்கத்தா பிஷப் அவர்களாகிய டாக்டர் வேல்டன் வைதீகப்பயிற்சியில்லாமல் பிள்ளைகள் நாஸ்திகப் படுகுழியில் விழுந்து கெட்டுப்போகிறார்களாதலால் கவர்ன்மெண்டு பாடசாலைகளிலுங்கூட கிறிஸ்து வேதமாகிய பைபிளைச் சொல்லிக்கொடுப்பது உசிதமும் அவசியமுமாமென்று அவர் அபிப்பிராயத்தைத் தெரிவித்து ஒரு பிரசங்கம் செய்தார். இதைக்கேட்ட சுதேச பத்திரிகைகள் சர்க்கார் பாடசாலைகளில் கிறிஸ்துவேதத்தைப் போதித்து கவர்ன்மெண்டார் ஹிந்துக்கள் மதத்தைக்கெடுக்க நினைக்கிறார்களென்று கூப்பாடுபோட இந்திய கவர்ன்மெண்டாரும் அவர்களுடைய அனுமதியின்பேரில் வடமேற்கு மாகாணங்களின் உதவி கவர்னராகிய ஸர் அந்தோனி மக்டோன்னல் அவர்களும், டாக்டர் வேல்டன் சொல்லியபடி மதவிஷயத்தில் பிரவேசிப்பதாக கவர்ன்மெண்டாருக்கு எண்ணமேயில்லையென்றும், எப்போதும்போல் அவர்கள் மதவிஷயத்தில் தலையிட்டுக்கொள்ளாமல் ஒதுங்கியிருப்பதன்றி அதற்குமாறாக நடக்கப் போகிறதில்லையென்றும் சொல்லி உறுதிகூற அந்த அமளியடங்கிற்று.

கவர்ன்மெண்டார் மதபோதகம்செய்ய யத்தனிப்பது கூடாதகாரியமாயினும் மதபோதனையின்றி வாலிபர்கள் தெய்வபக்தி குறைந்து சத்குணர்களாகாமல் கெட்டுப்போகிறார்களென்பதைமட்டும் கவர்ன்மெண்டார் உண்மையாக ஏற்றுக்கொண்டு அந்தக் குறையை நிவர்த்திக்க அந்தந்த மதஸ்தர்களே முயற்சி செய்யவேண்டுமென்று சொல்கிறார்கள். சென்னை பிஷப் அவர்கள் பெங்களூரில் செய்த ஒரு பிரசங்கத்திலும் தற்காலத்தில் லௌகீகவித்தையே விர்த்திசெய்யப்பட்டுவருவதால் தெய்வபக்தி குறைந்து நாஸ்திகம் தலையெடுத்துவருகிறதென்றும், இதனால் விளையும் தீங்கு இவ்வளவவ்வளவல்லவென்றும் சொல்லி எச்சரித்தார். மிஸ்ஸஸ் அன்னிபெஸன்ட் ஸிம்லாவில் செய்த ஒரு பிரசங்கத்திலும் வைதிகவித்தையில்லாமல், லௌகீகவித்தை மட்டுமே போதித்துவருவது பெருவிப்த்து விளைப்பதாயிருக்கிறதென்று சொன்னார். இப்படி வைதீகவித்தை அவசியம் என்பதைப் பற்றி எல்லாரும் ஒத்துக்கொண்டாலும் அக்குறையை நிவர்த்திசெய்யும் மார்க்கத்தைப் பற்றி ஒருவரும் தீரமாக ஒரு ஏற்பாடும் சொல்லக்கூடாமல் மயங்கிவருகிறார்கள். கிறிஸ்தவர்கள் கிறிஸ்துமதத்தையே போதித்து வருவது சிலாக்கியமென்கிறார்கள். ஹிந்துக்கள் கிறிஸ்துமதத்தையங்கீகரித்து தங்கள் சொந்த மதத்தைச்சிலாகித்துக் கொண்டாடுகையில் தங்களுக்குள் பொதுவாகப் பாடசாலைகளில் போதிக்கத் தக்கமதம் இன்னதென்று தீர்மானித்துச் சொல்லக்கூடாமல் தவிக்கிறார்கள். மிஷன் பாடசாலைகளில் கிறிஸ்துமத போதனைசெய்து வருகிறார்கள். காசியில் ஏற்படுத்திய ஹிந்து ஸென்ட்ரல் காலேஜில் ஹிந்து மதசாரத்தை மிஸ்ஸஸ் பெஸன்ட் திரட்டியெழுதிப்போதித்து வருகிறார். மதபோதனை யவசியமென்று எல்லாரும் ஒத்துக்கொண்டாலும், போதிக்கத்தக்கது 'எம்மதம், உம்மதம்' என்றுசொல்லி பேதம் பாராட்டிப்பேசுகிறார்கள். இந்தக்குறை பெருங்குறை என்பது உண்மையே. ஆனால் இப்படிப் பேதம்பாராட்டும் மதங்கள் எதுவும் வித்தியாசாலைகளில்

போதிக்கப்படுவதால் இக்குறை நிவர்த்தியாகா தென்பது திண்ணம்.

கடவுள் ஒருவரே என்பது உண்மையானல் அவரைப்பற்றியுள்ள உண்மைகளும் ஒரு தன்மையவேயென்று ஏற்படுகிறது. அவரையறியும் படியான பரிபக்குவம் பெறுவதற்காக பல மதஸ்தர்கள் பல உபாயங்களைக் கற்பித்திருக்கிறார்கள். அவ்வுபாயங்களைப்பற்றி வாதாடிப் போராடுவது உண்மையை யுணர்வதற்கு அவசியமான மார்க்கமில்லை. ஒவ்வொரு மதத்திலும் வெளிச்சடங்குகளும் ஆடம்பரங்களும் வெவ்வேருக விருப்பினும் இச்சடங்குகளெல்லாம் தீர்ந்து மறைந்தவிடத்தில் விளங்கும் தத்துவம் ஒரு தன்மையதாகவே யிருக்கிறது. இதை உண்மையில் தெய்வபக்திசெய்து தெய்வானுக்ரகம்பெற்ற எல்லாரும் ஒப்புக்கொள்கிறார்கள். இங்கே வைதீகமென்று நாம் சொல்லியது வேதத்தையனுசரித்த வித்தை அதாவது மெய்யறிவையுணர்த்தும் வித்தையென்னும் அர்த்தத்திலன்றி ஆஷாடபூதிகளாய் வேஷம்போட்டு "வைதீகர்கள்" என்று சொல்லிக்கொண்டு வயிறுவளர்த்து வரும் வீணர்கள் நடிப்பதைச் சொல்லவரவில்லை. மனுஷன்தெய்வீகத்தன்மைவாய்ந்தவனுயிருக்கிறுன். அவன் ஹிருதயத்தில் அகங்கார மமகாராதியழுக்குப்படிந்துகிடக்கும்வரையில் அவன் தன்ஸ்வரூபத்தையுணரமாட்டாமல் கபோதியைப்போல் அநித்திய வஸ்துக்களையெல்லாம் 'நான், நான்' என்று சொல்லிக்கொண்டு அவஸ்தைப்பட்டுத் திரிகிறுன். ஹிருதயசுத்தி பூர்த்தியானவிடத்தில் தனது மெய்ச்சுவருபத்தை அவன் சாக்ஷாத்காரமாகப் பார்க்கிறுன். இப்படிப்பட்ட சாக்ஷாத்காரம் பெறுவதே மெய்ஞ்ஞானம் பெறுவதும், மோக்ஷம் அடைவதுமாம். மனிதன் தன் மனதை உலகவிஷயங்களில் பற்றுதபடி கடவுளின் பாதாரவிந்தத்தைப்பற்றும்படி செய்து வருவானுயின் நாளடைவில் அவன் தானுகவே கடவுள் ஒருவர் இருக்கிறுர் என்பதை பிரத்தியக்ஷானுபவமாக அறிகிறுன். இந்த அனுபவம் ஒன்றேதான் உண்மையான பக்திக்கு ஆதாரம். மற்றப்படி வேறு ஆதாரங்களை நம்பி அவன் செய்யும் பக்தி அவனைத்தப்பாது சமுசயக்கடலில் தள்ளித்தடுமாறச் செய்யும். ஆனுல் ஒருவன் உண்மையில் ஹிருதயசுத்தியோடு ஸ்வாமியை யறியப்பிரயத்தனப் படுவானுயின் அவன் முயற்சி வீணுவதில்லையென்பது ஸத்தியம். எம்மதஸ்தர்களுள்ளும் உண்மையான தெய்வபக்தி வாய்ந்தவர்களும் உண்மையையுள்ளபடி கண்டறிந்த மஹான்களும் இதற்கு இடையருது சாக்ஷி பகன்றுவருகிறுர்கள்.

ரெவரெண்ட் டாக்டர் ஜென்கின்ஸ் என்பவர் தென்னிந்தியாவில் மிஷனரியாக விருந்தவர். இவர் இங்கிலாந்தில் 'வெஸ்லேயன் கான்பரென்ஸ்' என்னும் மதசபை கூடியபொழுது தான் உண்மையான கிறிஸ்தவராயிருப்பதற்குக் காரணத்தை நன்ருக எடுத்துச்சொன்னதாக அங்கிலேய நிருபர் ஒருவர் 'திராவிடவர்த்தமானி' யென்னும் பத்திரிகைக்கு இங்கிலீஷில் எழுதியிருக்கிறுர். டாக்டர் ஜென்கின்ஸ் ஸ்வபாவமாக நம்பும் குணமுள்ளவரல்லர்; எதையும் சந்தேகித்துப்பேசுவதே அவருடைய புத்திக்கு இயற்கையாயிருந்தது. அப்படியிருந்தும் இன்று அவர் உண்மையான கிறிஸ்துபக்தராகவிருப்பது என்னத்தினுலென்றுல், பைபிளில் சொல்லியதெல்லாம் உண்மையென்று அவர் ஐயந்திரிபறவுணர்ந்துவிட்டார் என்பதினுலல்ல; அந்த கிறிஸ்துவேதத்தைப்பற்றிய சரித்திர விவரங்களையாவது அவர் உண்மையாக நம்பினுர் என்பதினுலில்லை; வேதபுஸ்தகத்தில் சொல்லியுள்ள வருங்காலக் குறிகளைப்பற்றிப் பலர் அர்த்தஞ்செய்திருப்பதி னுண்மையை நம்பியதினுலல்ல; பின்னெப்படி உண்மையான கிறிஸ்தவரானுரென்றுல்: இந்த ஆதாரங்களையெல்லாம்விட்டு, அவர் உள்ளத்தில் கிறிஸ்து இருப்பது உண்மை, அவர் அன்றைக்கிருந்தது போல் இன்றைக்கிருக்கிறுர்; என்கிற உண்மை உரமாகப்பதிந்து நிற்பதால் அவர் கிறிஸ்துவை

நம்பினவராகவிருக்கிறார். அந்த நம்பிக்கைக்கு வேதங்களும் ஆகமங்களும் அவருக்குப்பிரமாணமல்ல. அவருள்ளத் துதித்து மாறாது நிகழும் உணர்வே அவருக்கு ஆதாரமும் பிரமாணமுமாம். பிறர் ஒருவர் வியாக்கியானத்தைக்கொண்டு கடவுளை நம்பினால் அது அல்லல் விளைக்கும். இன்றைக்கு ஒருவர் சரியென்று ரூபித்துச் செய்த வியாக்கியானம் நாளைக்கு இன்னொருவரால் ஆக்ஷேபித்து தப்பென்று ரூபித்துக்காட்டப்படும். ஆகையால் இப்படி பிறர் செய்த அர்த்தத்தைக்கொண்டு நம்புவது மாறாத நம்பிக்கைக் கிடங்கொடுக்காது. மாறாத நம்பிக்கையே பக்தி யெனப்படும். அந்த பக்தி உதயமாவது உள்ளத்துணர்விலேயேயன்றி வெளியாதாரங்களாலல்ல. பிறர் வாக்கியங்களையும் உபதேசங்களையும் கேட்பது உள்ளத்துணர்வுண்டாவதற்கு ஒருவிதத்தூண்டுதலாக உதவலாம். அந்தமட்டுமே அதன் பிரயோஜனமாம். உள்ளத்துணர்வு உதித்தாலன்றி உண்மையான பக்தியுண்டாவதில்லை. இந்த உணர்வு தர்க்கநியாயங்களால் உண்டாவதில்லை. ஆனால் குருகடாக்ஷத்தால் உண்டாகிறது.— என்பது அவர் சொல்லயதின் கருத்து. டாக்டர் ஜென்கின்ஸ்—" revealed to me by the Spirit of Jesus"—யேசுவின் அருளினால் விளங்கியது என்று சொல்லியதில் 'யேசு' வென்பதற்குப் பதிலாகப் பொதுவாக 'குரு' வென்றுவைத்து வாசித்தால் எல்லாரும் ஒப்பத் தக்கதாகும். இந்த அருளைப் பலர் பலவிதமாகச் சொல்லிக் கொண்டாடுகிறார்கள். 'யேசுகிறிஸ்து' என்றாலும் 'நடராஜர்' என்றாலும் 'தக்ஷிணாமூர்த்தி' என்றாலும் 'சத்குரு' வென்றாலும் எல்லாம் ஒன்றாகிய அந்த ஈசுவரனுடைய அருளையே குறிக்கிறது. இப்படி அருள்பெறுவதை ஈசுவரானுக்கிரகம் என்றுசொல்கிறார்கள்.

உலகத்திலுள்ள ஜனங்கள் எல்லாம் தெய்வம், தெய்வம் என்றுசொல்லி தெய்வத்தைத் துதித்தாலும், உண்மையாக அதன் அர்த்தத்தையறிந்தவர்கள் வெகு சிலரேயுளர். மதாநுஷ்டானம் உலகத்தில் உண்மையாக ஈசுவர கடாக்ஷத்தைப் பெறுவதற்கு வேண்டியதாகவின்றி ஆசார விசேஷத்தைப் பொறுத்ததாகமட்டும் இருந்துவருகிறது. அதாவது ஜனசமூக வழக்கத்தைப்பொறுத்ததாக விருக்கிறது. இதனால் மெய்ஞ்ஞானமு சித்திக்காது. அநேகவித சித்தாந்தங்களுண்டாகி ஒவ்வொன்றும் பல ஜனங்களால் உண்மைவிசாரணையும் உள்ளுணர்வுமின்றி, கோஷ்டி பலத்தினிமித்தம் மேலுக்குமட்டும் அங்கீகரித்துப் பின்பற்றப்பட்டுவருகிறது. இப்படி நடந்துவருவதால் உள்மதக்கக்ஷிகளும், சமய கோஷ்டிகளும் அதிகரித்து உண்மையறிவை மூடி மறைப்பதற்குக் காரணமாயிருப்பதன்றி மற்றப்படி மெய்ப்பிரயோசனம் யாதுமில்லை, இப்படிப் பட்ட சமயகோஷ்டிகள் அதிகரித்து விர்த்தியடைந்திருப்பதால் உண்மையான மதபோதம் செய்வது கூடாமையாகவிருக்கிறது. வித்தியாசாலைகளில் கலாசாஸ்திரங்களும் பூதௌதிக உண்மைகளும் அவ்வத்துறையில் கற்றுத்தேறி அனுபவஞானம்பெற்ற பண்டிதர்களால் போதிக்கப்பட்டு வருகின்றன. எல்லா சாஸ்திரங்களிலும் மேலான சாஸ்திரமாகிய கடவுளையுணர்த்தும் வேதசாஸ்திர மட்டும் அவரைப் பிரத்தியக்ஷத்தில் சாக்ஷாத்காரமாகக் கண்டறியாத சாமான்யர் போதிக்கலாமென்பது எப்படி சாத்தியப்படுமோ? உண்மையையுணர்ந்த மெய்ஞ்ஞானிகள் "எம்மதமும் சம்மதமாம்" என்னும் கொள்கையையுள்ளத்துணர்ந்து அனுஷ்டிப்பவர்களாதலால் அவர்கள் போதிக்கும் மெய்ப்போதனையில் வீண் மதவழக்குகள் உண்டாகிறதில்லை. மேலுக்கு வித்தியாசமாகத் தோற்றுவதையெல்லாம் அவர்கள் தங்களுடைய ஞான தர்சன ஒளியால் ஒற்றுமை விளங்கத் துலக்கிக் காட்டுகிறார்கள். இப்படி மெய்ஞ்ஞான ஒளியினால் பார்க்கும்பொழுது வேற்றுமையில் ஒற்றுமை விளங்குவதினாலேயே மெய்யுணர்வாகிய இந்த வித்தையைப் பரம இரகசியம் என்றும்

குப்தவித்தையென்றும் மேலோர் சொல்லி யிருக்கிறார்கள்.

இச்சந்தர்ப்பத்தில் கௌண்ட் லியோ டால்ஸ்டாய் என்னும் ருஷிய மஹான் ஆரியன் என்னும் பத்திரிகைக்கு எழுதிய கடிதத்தில் கூறியிருக்கும் சில புத்திமதிகளை யிங்கெடுத்துக் கூறுவது உசிதமாயிருக்குமென் றெண்ணுகிறோம். கௌண்ட்லியோ டால்ஸ்டாய் மெய்யுணர்வுள்ள மெய்ப்பக்தர் என்று முன் சொல்லியிருக்கிறோம். இவர் கிறிஸ்துவின் உபதேசவார்த்தைகளை யுள்ளபடி யுணர்ந்து உண்மையைப் பற்றி நிற்பவராதலால் மற்ற மதங்களினுண்மையை யுணர்வது இவருக்குக்கூடாமையல்ல. இதற்கு அத்தாக்ஷி அவர் எழுதியிருக்கும் கடிதத்திலேயே காணலாம். ஐரோப்பிய தேசங்களில், மேல்வகுப்பாருக்கும் கீழ் வகுப்பாருக்கும், உழைப்போருக்கும் முதலாளிகட்கும், ஒருதேசத்தாருக்கும் மற்றொரு தேசத்தாருக்கும் அடிக்கடி சண்டை சச்சரவுகளுண்டாய் வருவதைத் தடுக்க சட்டங்களும், சமாதானத்தை ஸ்தாபிப்பதற்கான சபைகளும் ஏற்படுத்தி சரிப்படுத்த யத்தனித்து வருவது அக்கேடுகளுக்கு உண்மையான பரிகாரமாகுமென்று ஹிந்துக்கள் நினைக்கக் கூடியதாகவில்லையென்று அவருக்கு எழுதியிருந்ததை யங்கீகரித்து அவர் அக்கேடுகளுக்கு உண்மையான பரிகாரம் இன்னதென்று எடுத்துச்சொல்கிறார் :—"பல நிர்ப்பந்தத்தால் ஒன்றுபட்டிருக்கும் ஜனசமூகம் நிலையான ஸ்திதியிலிருப்பதாகச் சொல்வதற்கில்லை; அன்றி அபாயமான ஸ்திதியிலிருக்கிதென்று சொல்லத்தகும். அப்படிப்பட்ட ஜனசமூகத்தை ஒன்றுபட்டிருக்கச் செய்யும் பந்தம் எந்த நிமித்தத்தினாலும் விட்டுப்போகக் கூடியதாகவிருக்கிறதுமல்லாமல், அச்சமூகத்துக்குப் பெரும்பாலும் தீங்கு விளைத்துகொண்டிருக்கக் கூடியதாகவுமிருக்கிறது. ஐரோப்பிய இராஜ்ஜியங்கள் இப்பொழுது இப்படிப்பட்ட நிலையில்தானிருக்கின்றன. இதற்குப் பரிகாரம் ஒன்றேயுண்டு. புத்தி விர்த்தியோடு கூடி அன்புசெய்யும் சக்திவாய்ந்த பிராணிகள்சேர்ந்த மன்பதை தேடின்றிக்கூடி ஒற்றுமையாயிருப்பதற்கு உபாயம், பயம், நிர்ப்பந்தம் இவற்றிற்குக் காரணமான கட்டுப்பாடுகளையெல்லாம் அறநீக்கி, அன்பே ஆதாரவாகக் கொண்டு பரஸ்பரம் நியாயமென்று அங்கீகரிக்கக்கூடியவகையில் ஒரு ஏற்பாடுசெய்து அதற்குட்பட்டு வாழ்வதேயாம். இப்படிப்பட்ட நிலைமையுண்டாவது மெய்ஞ்ஞான உணர்வு அல்லது உண்மையான தெய்வபக்திபுண்டு பண்ணும் சத்தியமதப் பிரவர்த்தியாலன்றி மற்றப்படியுண்டாகாது. சத்தியமதம் என்றதனுல் நான் கொண்டகருத்து என்னவெனில், "எல்லா மதங்களுக்கும் ஆதாரமாயுள்ள உண்மையான மூலக்கொள்கைகளாம்," அவை :—

1. மனுஷனுடைய ஆத்மா தெய்வீக சத்ஸ்வரூபமானது என்னும் உள்ளுணர்வு.

2. அப்படிப்பட்ட சத்ஸ்வரூபசித்விலாசமான ஜீவனிடத்தில் மதிப்பு இருத்தல்.

ஜீவனுக்கும் பரமாத்மாவுக்குமுள்ள சம்பந்தத்தை விளக்குவதில் ஹிந்து மதம் திடநுட்பத்துக்குப் பேர்போன பூர்வீக மதமென்றும், ஆனல் அதிலடங்கிய தத்துவ போதங்கள் ஜாதிபேத வித்தியாசம் பாராட்டப்படுகையால் அனுஷ்டானத்தில் அவ்வளவாகப் பயன்படவில்லையென்றும், ஜாதிபேதம் பாராட்டாத பௌத்தமதம், சமண மதம் இவற்றில் அதன் பிரயோஜனம் அதிகமாய் விளங்குகிறதென்றும் அவருக்குத் தோன்றிய அபிப்பிராயத்தை வெளியிட்டு, நாகரிகம்பெற்ற இந்தியர்களெல்லாரும் தங்களைப் பொறுத்த செய்கடனைச் செய்யவேண்டியது இரண்டுண்டென்று வற்புறுத்திக் கூறுகிறார். அவ்விரு கடமைகளுமென்னவெனில் :—

(1) மேலே சத்திய மதமென்று அவர் விவரித்துச் சொல்லிய உண்மையான மதத்தின் மூலக்கொள்கையை அதாவது மனுஷனது ஆத்மா தெய்வீகம் பொருந்தியதென்றும்,

அந்த தெய்வீக சித்விலாசமான மனுஷ ஜீவனிடத்தில் அபேதமாய் அன்பு பாராட்டிப் பூஜிக்கவேண்டியதென்றுமுள்ள உண்மையை சாமான்ய ஜனங்கள் உணராதபடி அவர்கள் உளக்கண் பார்வையை மறைக்கும் பொய்ச் சித்தாந்தங்களால் விளைந்த மூட நம்பிக்கைகளை நாசம் செய்ய முயலவேண்டும்.

(2) இப்படி மௌட்டியத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தைப் பரவச்செய்யவேண்டும்.

இந்த இரண்டு கடமைகளும் மிக முக்கியமானவையே. இக்கடமைகளை கற்றுத்தேர்ந்த இந்தியர்கள் நிறைவேற்ற எவ்வளவு யோக்கியதையும் சக்தியுமுள்ளவர்களாக விருக்கிறார்களோ அந்த அளவுக்குச்சரியாக இந்தியாவும் முன்னுக்குவரும். இது பரநன்மையைமட்டும் குறித்துச்சொல்லியதில்லை. இக நன்மைக்கும் இதுவே வழி. ஐரோப்பியர்களையும் இப்படியே கிறிஸ்து மதமென்று சொல்லி அவர்கள் கொண்டாடும் தப்பெண்ணங்களையெல்லாம் ஒழித்து உண்மையில் கிறிஸ்துவை வழிபட்டு நடக்கும்படிக்கும் அப்படி நடந்தாலன்றி அவர்களைப் பாதிக்கும் தீங்குகள் ஒழியாவென்றும் சொல்லி வற்புறுத்திக்கூறி யெழுதியிருக்கிறார்.

"ஒப்புக்குச் செய்தையோ உண்மைக்குச் செய்தையோ?" என்று ஒரு பெரியவர் ஒரு பக்தனைப் பரிசோதிக்குமாறு கேட்டார். உலகத்தில் ஜனங்கள் மதானுஷ்டானங்களை அனுசரிப்பது பெரும்பாலும் ஒப்புக்காகவேயிருக்கிறதன்றி உண்மைக்காகவில்லை. எதையும் ஒப்புக்குச் செய்வதைவிட்டு உண்மைக்குச் செய்துவந்தால் நல்லகாலம் பிறக்கும், நல்லவழி பிறக்கும், இகம் பரம் இரண்டிலும் நல்லகதியும் கிடைக்கும். இதுவே கௌன்ட் டால்ஸ்டாய் வற்புறுத்திக்கூறவந்த உண்மை. இந்த உண்மையே நமது வேதாந்தத்திலும் பன்முறை படித்துப் படித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. யேசுகிறிஸ்துவும், புத்தரும் இந்த உண்மையையே எடுத்து அடுத்தடுத்துப் போதித்திருக்கிறார்கள். ஆகையால் "உண்மையான மதம்" எதுவோ அதைப் போதிப்பதில் இடையூறு ஒன்றுமில்லை. பூர்ணானுபவம்பெற்ற மெய்ஞ்ஞானிகள் வெளிவந்து இக்கடமையை மேற்போட்டுக்கொண்டு நடத்துவதற்குள்ள இடையூறுகளன்றி மற்றப்படி இடையூறு ஒன்றையும் காண்கிலேம். அப்படிப்பட்ட பெரியோர்கள் அங்கங்கே சிலரிருக்கிறார்கள். "ஆண்டிவாக்கு அம்பலமேறாது" என்பதற்கொக்க, காலபேத சுபாவத்தால் அவர்கள் வாக்கு அதிகாரிகள் செவியிலேறக் கூடியதாகவில்லை. கவர்ன்மெண்டார் வித்யாசாலைகளில் கற்கும் மாணுக்கர்களைத் திருத்த வழிதேடிக்கொண்டிருக்கையில், பள்ளிப்பருவம் நீங்கிய பெரியோர்கள் மனத்துள்ள இருளைப்போக்கி மெய்யுணர்வையூட்டப் பத்திரிகைகள் பெரு முயற்சிசெய்துவர யாதொரு தடையையும் காணோம். இக்கடமையை நம் சக்தியானுசாரம் நிறைவேற்றவேண்டுமென்றே சிறிது காலமாக மெய்யுணர்வு பரவுவதற்கேதுவான விஷயங்களை இப்பத்திரிகையில் விசேஷமாகக் கவனித்து விளக்கிவருகிறோம். இதில் சமயபேதத்துக்கும் மதமாச்சரியத்துக்கும் சிறிதேனு மிடமுண்டாகக் காணோம். உண்மையை யுணர்ந்தொழுகினல், உண்டாக நிமித்தமுமில்லை.

---

## ப்ரெஸிடெண்ட் மாக்கின்லிக்கு நேர்ந்த விபத்து.

அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களின் அதிபதியாகிய மிஸ்டர் மாக்கின்லி அவர்கள் பப்பலோ என்னும் நகரில் ஏற்பட்டபொருட்காக்ஷிசாலையில் தன்னைப் பார்க்கவந்த கனவான்களுக்கு பேட்டிகொடுத்துக்கொண்டிருக்கையில் ஒரு பாதகன் அவருக்குக் கைகொடுத்து அவர் வழக்கப்படி கைகுலுக்கிக்கொண்டிருக்கையில் கைக்குட்டையால் மூடி வைத்துக்கொண்டிருந்த கைத்துப்பாக்

கியால் அவரை இருமுறை சுட்டுவிட்டான். ஒரு குண்டு மாரிலும் மற்றொரு குண்டு வயிற்றிலும் பாய்ந்து அவர் பிழைக்கரியஸ்திதியிலிருக்கிறார். மாரில் பாய்ந்தகுண்டை யெடுத்துவிட்டார்கள். வயிற்றில் பாய்ந்தகுண்டையெடுக்கமுடியவில்லை. அவருக்கு சுரங்கண்டு ஆகாரம்உட்கொள்ளமாட்டாமல்கிடக்கிறார்.* இந்தக்கொடுமை செய்தவன் 'அனார்கிஸ்ட்ஸ்' என்று சொல்லப்படும் இராஜாங்கவைரிகளைச் சேர்ந்தவனும். இவர்கள் கொள்கை யென்னவென்றால் "துரைத்தனம், இராஜாங்கம் இவற்றால் மானிடர் சமதையாக சுகமனுபவிக்காமல் பணக்காரர் மேன்மேலும் பணப்பெருக்கடைய, ஏழைகள் மேன்மேலும் வருத்தமுறுகிறார்கள். ஆகையால் துரைத்தனமேயில்லாமலிருப்பது ஜனசமூகக்ஷேமத்துக்கு நலம்" என்பதாம். இக்கொள்கையை உண்மையாகக்கொண்ட அவர்கள் தங்களுக்கு எக்கேடுவரினும் துரைத்தனத்தை நிலைகுலையச் செய்வதே பெருங்கடன் எனக்கருதி அக்கருத்தை நிறைவேற்றும் துரைத்தனத்திற்குத் தலைவர்களான, அரசர்கள், அதிபதிகள் இவர்களைச் சமயம்பார்த்திருந்து கொலைசெய்ய யத்தனித்துவருகிறார்கள். இத்தலியரசனான ஹம்பர்ட் அரசர் கொஞ்சகாலமுன் இப்படிப்பட்ட கொள்கையுள்ளவர்களில் ஒருவன் கையால் கொலையுண்டு மாண்டார். நமது எட்வர்ட் அரசரும் இள்வரசராயிருந்த காலத்தில் ஐரோப்பாவில் பிரயாணம்செய்துகொண்டிருக்கையில் இக்கொள்கையுடையோரில் ஒருவனால் கொல்ல யத்தனிக்கப்பட்டு தெய்வயத்தனமாகத் தப்பிக்கொண்டார். ருஷிய சக்ரவர்த்தி யிந்தப் பாதகர்கள் கொடுமைக் கிரையாகாதபடி வெகு பந்தோபஸ்தோடு வெளியில் புறப்பட்டு வருகிறார். இப்படி ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் ஜனசமூகம் ஏற்பட்டிருக்கும் ஒழுங்கு அனேகருக்கு திர்ப்தியைக் கொடாது இப்பொழுதுள்ள ஜனசமூக ஏற்பாட்டை எவ்வாற்றாலும் நிலைகுலையச்செய்வதே விரதமாகப்பூண்ட ஒருவகைக் கொள்கையுடையாரை யுண்டுபண்ணி யிருக்கிறது. எளியாரை வலியாராண்டால், வலியார் வல்லமையை வேரறுக்க இவ்வித கொடுங்கொள்கையுள்ள இனத்தார், ஜனசமூகத்தை நாசஞ்செய்யும் வேர்ப்புழுக்களாக ஏற்பட்டிருக்கிறார்கள். ஐரோப்பிய தேசங்கள் ஒன்றையொன்று நம்பாமல் ஒவ்வொரு தேசத்தாரும் சமாதானத்தைநாடி தத்தம் சைனியங்களையும் கப்பற்படைகளையும் பலப்படுத்திக்கொண்டேயிருக்கிறார்கள். அந்தந்தத் தேசத்தின் அரசாக்ஷிசெலுத்தும் அதிபதிகள் துரைத்தன விரோதிகளான 'அனார்கிஸ்டஸ்' என்னும் கொள்கையுடையோர் கொடுமையால் மனச்சமாதானமின்றியும் தங்களுயிர் தங்களது என்கிற நிச்சயமின்றியும் சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இப்படி இராஜ்ஜியத்திற்கு வெளியிலும் உள்ளிலும் அபாயமே அதிகமாகவுள்ள நிலைமையில் எரிமலையின்மேல் கட்டப்பட்ட அரண்மனையில் வசிப்பவர்போல் ஐரோப்பா அமெரிக்கா தேசத்தார் வசித்துவருகிறார்கள். இப்பொழுது ஏற்பட்டுள்ள துரைத்தன முறையும் அதை யனுசரித்துள்ள ஜனசமூக ஏற்பாடும் பயத்தையும் நிர்ப்பந்தத்தையும் ஆதாரமாகக் கொண்டேற்பட்டிருப்பதால் அவை இப்படி நிலையற்ற ஸ்திதியிலிருக்கின்றனவென்றும் இப்படி பயமும் நிர்ப்பந்தமும் ஆதாரமாகவுள்ளவரையில் இந்த ஜனசமூக ஏற்பாடு நிலைத்திருக்க ஹேதுவில்லையென்றும் கௌன்ட் லியோ டால்ஸ்டாய் போன்ற மகான்கள் அபிப்ராயப்படுகிறார்கள். ஐரோப்பா அமெரிக்காவிலுள்ளவர்களெல்லாரும் கிறிஸ்தவர்களே. அதாவது கிறிஸ்துவை வழிப்பட்டு நடப்பவர்கள். கிறிஸ்துவை இவர்கள் வழிபட்டுநடப்பது உண்மையாயின் அவருடைய போதனையில் பூர்ண நம்பிக்கையுள்ளவர்களாய் அதை யனுசரித்து நடந்துகொள்ளவேண்டும். அவர் எதற்கும்

* இப்படி ஒருவாரம் கிடந்தபின் அவர் மாண்டு விட்டாரென்று செப்டெம்பர்மீ 14வ வந்த தந்தியால் தெரிய வருகிறது.

அன்பையே ஆதாரமாகக் கூறியிருக்கிறார். ஆகையால் ஜனசமூகத்துக்கு அன்பாதரவையே மூலாதாரமாகக்கொண்டு அக்கொள்கையின்பேரில் ஜனசமூக ஏற்பாடு அமைந்திருக்கவேண்டும். ஏசுகிறிஸ்துநாதர் மட்டுமல்ல, புத்தபகவானும், ஸ்ரீ கிருஷ்ணபகவானும், மற்றப்படி உண்மையுணர்ந்த மெய்ஞ்ஞானிகளும் அன்பையே சிலாகித்துச் சொல்லியிருக்கிறார்கள்.

"அறத்திற்கேயன்புசார்பென்பவறியார்
மறத்திற்கு மஃதேதுணை."

யென்று சொல்லியுள்ளார் திருவள்ளுவநாயனாரும். அறத்திற்கே அன்பு துணையென்பார் அறியாதவர், மறத்திற்கும் அதாவது பகைமையை நீக்குவதற்கும் அவ்வன்பே துணையாகும் என்பதை யவர்கள் அறிந்திலர். இப்பொழுது உலகத்தை யாளும்படியான ஸ்திதியிலிருப்போர் தங்கள் நிலைகெடாதபடி வேண்டியகட்டுக் காவல்கள் நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்திக் கொண்டு அதையே மேலான ஒழுங்காக மதித்துவருகிறார்கள். கிறிஸ்து போதித்த உண்மைகள் இக்காலத்திற் கேற்காதென்றும் நித்தியப்படி நடத்தைக்குக் கட்டிவராதென்றும் சொல்கிறார்கள். கிறிஸ்து தேவபுத்திரன் என்பது உண்மையானால் அவர் போதித்த உண்மைகள் எக்காலத்துக்கும் ஒத்தவையாகவே யிருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவை உண்மைகள் ஆகா. மனுஷன் ஜட-ஜீவ பாகங்கள் இரண்டும் பொருந்தியவனாக விருப்பதுபோல் அவனைக் கட்டுப்படுத்தும் வகையும் இரண்டத்தாகவிருக்கிறது. அதாவது அன்பு, பயம் என்னு மிரண்டாம். அன்பு அழியாதது; மாறாநிலையுடையது. பயம் அதற்குமாறாக அழியுந் தன்மையது; அடிக்கடி மாறும் சுபாவமுடையது. அன்பு ஆதரவினால் மனிதர்களைக் கட்டுப்படுத்தும்; பயம் நிர்ப்பந்தத்தால் அவர்களைக் கட்டுப்படுத்தும். பயம் ஸ்தூலத்தைப் பாதித்து ஹிருதயத்தைக் கட்டுப்படுத்தும்; அன்பு ஹிருதயத்தைப்பாதித்து ஸ்தூலத்தைக் கட்டுப்படுத்தும். அழியாநிலையுள்ள அன்பை மூலாதாரமாகக்கொண்டு ஏற்பட்டது அழியாது நிலைத்திருக்கும்; அழிவதும் அடிக்கடி மாறிக்கொண்டிருப்பதுமான பயத்தை மூலாதாரமாகக்கொண்டு ஏற்பட்டது அடிக்கடிமாறி யழியும் சுபாவமுடையதாயிருக்கும். இதனால் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் ஜனசமூக ஏற்பாடு நிலையான அன்பை ஆதாரமாகக்கொண்டு முற்றும் ஏற்பட்டிராமையால் அந்த அளவுக்கு அது மாறுபாடுள்ளதும் நிலையற்றதுமாக விருக்கிறதென்பது பிரத்தியக்ஷமாகத் தெரியவரும். ஆனால் ஒரு நிலையிலிருந்து வழக்கப்பட்டவர்களுக்கு அவர்களிருக்கும் நிலையே சரியென்று பழக்கபலத்தால் ஒருவித உறுதி யேற்பட்டபிறகு அதை மாற்றுவது கஷ்டமாம். இவர்கள் உறுதி மாறினாலும் மாறாவிட்டாலும் விதி அதன் வழியே நடந்துகொண்டு வருகிறது. விவேகிகள் விதிவலியை யுணர்ந்து அதன் வழிப்பட்டு அதை வெல்லுவார்கள். அவிவேகிகள் 'ஆஸ்ட்ரிச்' பக்ஷியைப்போல் ஆபத்துவந்தவிடத்து கண்ணை மூடிக்கொண்டு அவ்வாபத்துக்குத் தப்பினதாகவெண்ணி விதிப்பயனி லகப்பட்டு வருந்துவார்கள். இவ்வளவே நாம் இங்கு சொல்லத்தக்கது.

---

## ஆநந்தவல்லி.

### ஓர் உண்மையான கதை.

### III

"And we will talk, until thought's melody
Become too sweet for utterance, and it die
In words, to live again in looks, which dart
With thrilling tone into the voiceless heart
Harmonising silence without a sound."

*Shelley.*

உருக்கிவார்த்தத் தங்கம்போல் உள்ளத்தில் மாசுபடியாது நமது ஆநந்தவல்லி பேதைப் பருவங்கழிய வளர்ந்து பெதும்பைப் பருவமானாள். மணமுடிக்கும் காலம் கிட்டியது.

வதுவைக்கேற்ற வரன் தேடவேண்டிப் பெரியோர் சிந்தைகொள்ளலானார்கள். இப்படியிருக்கும்பொழுது ஒருநாள் தேவிபுரத்தை நோக்கி ஒருவண்டிவந்தது. அதில் ஏறிவந்தவர் பட்டுப் பீதாம்பரமுடுத்துப் பெரிய இடத்து மனுஷராகத் தோற்றினார். வண்டிக்காரனோ அவருக்கெதிரில் வணக்க ஒடுக்கமாகவிருப்பவன்போல் நடித்தாலும் அவருக்குப் பின் அவரிடத்து அற்ப மதிப்புள்ளவனாகக் காட்டிவந்தான். தேவிபுரத்துக்குச் சுமார் நாலு மைல் தூரத்தில் பிராதக்காலை ஸ்நானம் செய்யவேண்டி வண்டியில் வந்த எஜமான் அழகிய பொய்கையுள்ள ஒரு கிராமத்தில் இறங்கி தனது நித்தியகடன்களை முடித்து வரச்சென்றார். அப்பொழுது சாலையில் வண்டியை அவிழ்த்துவிட்டு குளக்கரையில் மாடுகளுக்குத் தண்ணீர் காட்டும்படிவந்த வண்டிக்காரன் அங்குவந்த வேறொரு வண்டிக்காரனைக்கண்டு அவனோடு உறவாடிப் பேசலுற்றான். வண்டிக்காரக் கருப்பன் தான் புதிதாய்க் கண்ட வண்டிக்கார கோவிந்தனை விளித்து,

"அண்ணே, இந்த ஊரிலே மாட்டுக்குத் தவிடு கிவிடு ஆப்படுமோங்கிறேன்?" என்று கேட்டான்.

"சூத்திரத்தெருவிலே எங்கேயும் அகப்படல்லே. பாப்பாரத்தெருவுக்குப் போனாக் கிடைக்கும் போலிருக்குது."

"ஆனாப்போவலாம், வரையா அண்ணே?"

"ஆகா தம்பி, மாட்டுக்குத் தண்ணி காட்டிக் கொண்டுபோய்க் கட்டிட்டுப்போவலாம் வா. நான்போய்க் கோணியெடுத்தாரேன்."

இப்படி பேசிக்கொண்ட சிலநேரத்திற்கெல்லாம் இவர்களிருவரும் கோணியுங் கையுமாக அக்கிரகாரத்தெருவில் தவிடு வாங்குவதற்காக வீடுவீடாக விசாரித்துக்கொண்டு சென்றார்கள். அதிகாலை வேளையாதலால் வாசலிலிருந்து 'அம்மா' வென்று கூச்சல்போட்டால் சண்டைக்கு வருவார்களென்று திறந்திருந்த வீடுகளிலெல்லாம் மெதுவாகப் புகுந்து நடையிலிருந்து உள்ளே யெட்டியெட்டிப் பார்த்து "அம்மா, தவிடு அகப்படுமோ" வென்று மெல்ல விசாரித்துவந்தார்கள். இப்படி நாலு வீடுகளில் விசாரித்துக்கொண்டு ஐந்தாம் வீட்டினுள் நுழைந்து நடையிலிருந்து எட்டிப் பார்த்து "அம்மா——" வென்று வாயெடுத்த கருப்பன் பாம்புக்குடத்தில் கையிட்டவனைப்போல் சரேலென்று கழுத்தையுள்ளே யிழுத்துக்கொண்டு பிரமித்துப்போய் நின்றான்.

கோவிந்தன் "என்னங்கிறேன்?" என்று மெதுவாய்த் தலையை நீட்டிப்பார்க்க, அவனும் சரேலென்று தலையை யிழுத்துக்கொண்டு போய்விட்டான். கருப்பன் கோவிந்தனைப் பார்த்து,

"அண்ணே, இத்தனை காலையிலேவந்து பாப்பாரத்தெருவிலே நாம் வீடுவிடாப் புகுந்தாக்கே என்ன சொல்வாங்களோ, என்னவோ! வெளியிலிருந்தபடியே கூவிக் கேட்டுப்பார்ப்பம்; கிடைத்தால் ஆச்சுது; இல்லாட்டிப் போயிவிடுவங்கிறேன்" என்று சொல்லி, அடுத்தவீட்டு வாசலில் நின்று "அம்மா, தவிடு அகப்படுமோ, தவிடு?" என்றாத்துக் கூவினான். அந்தக் கூச்சல் போட்டதும் அவன் வார்த்தைக்கு பதில் கிடைக்குமுன் அவன் முன்புகுந்த வீட்டிலிருந்து ஒரு பிராமணன் பட்டுப் பீதாம்பரத்தோடு ஸ்தாலிமடிசஞ்சி சகிதமாய் ஸ்நானத்திற்குப் புறப்பட்டு வெளி வரக்கண்டான். அவரைக் கண்டதும் கருப்பன் திடுக்கிட்டு "அடேயண்ணே! நான் யாரோண்ணுக்கிட்டிருந்தேனே! நம்ம ஐயருங்கிறேன். இந்தப் பாப்பான் நல்ல பாப்பான்! திருட்டுப் பாப்பான்!! எங்கேபோனாலும் இப்படித்தான்!—நான் பார்த்துக்கிட்டேவாரேன்"—என்று அடிக்கடி அதிசயக்குறிப்புகளும் சைகைகளும் காட்டிக்கொண்டு குட்டை குட்டையாகப்

பேசித் தன் மனக்கருத்தை அவன் தோழனுக்கு வெளியிட்டான்.

கோவிந்தன் இதைக்கேட்டு அதிசயித்து "பாப்பாரெல்லாம இப்படிச்செய்யுறாங்களே! அதான் ஊருகெட்டுப் போவுது! காலமழை பெய்யிறதில்லே; நாட்டிலேச் சாமம் பிடிங்கித் தின்னுறது! நான் அவங்கள் புருசன் பெண் சாதி யுங்களாக்குமெண்டல்லோ எண்ணியிருந்தேன்! பாப்பாரெல்லாருமே கெட்டுப் போனாங்கள். அதுவும் வேஷக்காரப் பாப்பான்களை நம்பப்படாது. பெருமோசம்! பெருமோசம்! அவள் வீட்டுக்காரன் கண்டு தூணிலே கட்டிவைச்சு உதைத்து குடுமியை அறுத்துவிட்டேட்டாக்கே, யென்னபண்ணுவானோ பாப்பான்?"

"ஊசப்பருக்கைத்தின்னிப் பாப்பாங்களுக்கு அவ்வளவு ரோசமேது? அடே அவன் எப்படியாவிது போறான். இந்தப் பாப்பான்—என் வண்டியிலே வந்தபாப்பான்—சாமியாராச்சே, எல்லாரும் இவரைத் தெய்வமாகக் கும்பிடராங்களே—இவரு இப்படி அநியாயம் பண்ணினுக்கா அடுக்குமா? தெய்வத்துக்குக் கண்ணில்லே. இந்தப் பாப்பாருதான் நமக்கு சொர்க்கத்துக்கு வழிகாட்டப்போறாங்களாம். அடபோடா போ! சும்மா வயிற்றுப் பிழைப்புக்காக ஏழை எளியவர்களை மிரட்டிக் காசு பிடுங்கிறது ஒண்ணுதான் கண்டேன்—வேறே ஒண்ணும் காணலே."

"என்னடா அப்பா, வேறே ஒண்ணும் காணலே என்கிறையே! இப்போ கண்ட காட்சி வீண் காட்சியா? இல்லே மறந்துட்டையா?

"ஆ! வேறே, இதைத்தான் கண்டேன். சொர்க்கத்துக்குப் போறவழி இதுதானுக்கும்! இந்த வழிகாட்ட இந்தப் பாப்பாரை சாமியாக வைத்துக் கும்பிடுவானேன; இவருக்கு காணிக்கை கட்டுவானேன்? அந்தக்காசு கையிலேயிருந்தா, ஏழை எளியவன்களுக்கு எத்தனையோ காரியத்துக்கு சாதகமாயிருக்குமே! காலம் கெட்டுப்போச்சு அண்ணேன்! காலம் கெட்டுப்போச்சு!"

இப்படி பேசிக்கொண்ட வண்டிக்காரர்கள் இருவரும் அக்கிரகாரத்தில் அலைந்து தவிடு வாங்கிக்கொண்டு வந்து குளக்கரையில் ஆடிப்புக்கூட்டி மாட்டுச்குக் கொள்ளு வேகவைத்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது குளக்கரையில் ஆட்வரும் பெண்டீரும் ஸ்நானம் செய்து கொண்டிருந்தார்கள். ஆற்றங்கரை, குளத்தங்கரையில் நடக்கும் சம்பிரமங்களையெல்லாம் எடுத்து விரித்துரைக்கப் புகின் நமதுகதை இராமாயண மஹாபாரதத்தைப் போன்ற ஒரு பெரிய இதிகாசமாய்விடும். அவ்வளவு பெரிய கிரந்தமெழுத நமக்குத் திறனுமில்லை; எழுதவேண்டுமென்கிற ஆசையுமில்லை. ஊரிலுள்ள ஸ்திரீகளெல்லாரும் அவரவர்கள் மனதில் சேகரித்துவைத்த வம்புகள் வசைமொழிகளையெல்லாம் கொட்டியளந்து, கொண்டுகொடுத்துப் பண்டம் மாற்றிக்கொள்ளும் பெரிய சந்தை இந்த ஸ்நானகட்டங்களேயாம். இங்கே நடக்கும் விர்த்தாந்தங்களையும், விசேஷங்களையும், 'வம்பு தொம்பு' களையும், வீண்சண்டைகளையும், சலகங்களையும் சொல்லிமுடியாது. இங்கிலாந்து முதலிய மேற்குத் தேசங்களில் ஊருக்கூர் பத்திரிகை பிறந்துலாவி வருகிறதென்ற அந்த மாதிரி இந்தியாவிலும் முக்கிய பட்டணங்களில் தினவர்த்தமான பத்திரிகை போட்டு வருகிறார்களே. இப்படிப்பட்ட பத்திரிகைகள் நாட்டுப்புறத்தில் பரவாததற்குக் காரணம் இந்த ஸ்நானகட்டங்களின் மஹத்துவமேயன்றி வேறல்ல. பெண்பாலருக்கு ஆற்றங்கரை குளத்தங்கரையும், ஆடவருக்கு திண்ணைக்கச்சேரிகளுமுள்ளவரையில் ஊர் அக்கப்போர்களையுணர்ந்துகொள்ள அவர்களுக்கு வர்த்தமானப் பத்திரிகைகள் வேண்டியது அனவசியமே. பத்திரிகை யெப்போ வேண்டுவதில்லையோ அப்போ படிப்பும் வேண்டுவதில்லையென்பது பிரத்தியக்ஷமாக ஏற்படுகிறது. சேஷி அவள் நாட்டுப்பெண்ணைச் சூடிட்டது,

இராமசுப்பு அவன் பெண்டாட்டியோடு சண்டைபோட்டது, நாகரத்னம் அசலாத்துக் காரனோடு இரகசியம் பேசினது, ஜீவரத்னத்தைப் பார்த்து வழியில்போகிறவன் கண்ணைச் சிமிட்டியது, சுப்பலக்ஷ்மி லச்சைகெட்டு இச்சகம்பேசி உச்சந்தலை பிளக்க அடிபட்டது முதலாக எல்லா இரகசியங்களும், எல்லா விஷயங்களும் சம்பவங்களும் இங்கு பிரஸ்தாபத்துக்கு வந்துவிடும். அந்த ஊரில் ஒவ்வொரு வீட்டிலும் நடக்கும் அடுக்குள் இரகசியம், படுக்கையுள் இரகசியம், வாசற்சண்டை, கொல்லைச் சண்டையெலலாம் சந்தையில் சாமான் வந்து சேர்வதுபோல இங்குவந்து சேர்ந்துவிடும். குளத்தங்கரைக்கு வராத இரகசியம் ஊரில் ஒன்றுகூட இராது. இது வெகு காலமாக உள்ள சம்பிரதாயமேயன்றி நாமாகக் கற்பித்தெழுதியதல்ல. இதைப்பற்றி எழுதவெழுத வளருமாதலால் இந்தமட்டோடே நிறுத்த வேண்டியது அவசியமாயிருக்கிறது. நாட்டுப்புற வாசனையுள்ளவர்களுக்கு இந்த மகத்தான ஸ்தாபனத்தைப்பற்றி நாம் விசேஷமாகச் சொல்லத் தேவையில்லை. நாய் முகப்பமறிவதுபோல் ஆற்றங்கரை குளத்தங்கரையின் விசேஷத்தை அவர்கள் இரண்டொரு வார்த்தையிலிருந்து நன்றுபறிந்து கொள்வார்கள். நாட்டுப்புற வாசனையில்லாதவர்களுக்கு நாம் என்னதான் வர்ணித்தெழுதினாலும் இதன் மகிமை பூரணமாய் விளங்காது. இதன் மகிமையை அவர்கள் நேரில்கண்டு அனுபவித்தறியவேண்டுமேயன்றி வாசித்தறிவது கூடாமை. காசுபணம் செலவின்றியும், வேவுகாரர், ஒத்துக்காரரின்றியும், பத்திரிகைபோடுகிறவர்கள் ஏற்படுத்தும் 'ரிபோர்ட்டர்கள்' சமாசாரம் சேகரிப்பவர்கள் முதலான சிப்பந்திகளில்லாமலும், தந்தி, தபால், அச்சுயந்திரம் முதலான உபகரணங்களின்றியும் ஊரிலுள்ள சமாசாரங்களெல்லாம் அதிவிரைவில் ஸ்நான கட்டத்துக்குவந்து சேருவது எப்படியென்று கேட்டால், அதை வாசிப்போர்க்குத் திர்ப்தியுண்டாகும்படி சொல்ல நம்மால் முடியாது. அசாத்திய மல்லவென்றுமட்டும் நமக்கு நன்றாகத்தெரியும். இது தீர்த்தக்கரை மகத்துவத்தால் நேரிடுகிறதென்றும் சொல்வோம். தீர்த்தக்கரை மகத்துவமென்றால் என்னவென்று யாராவது அசந்தர்ப்பக் கேள்விகேட்டால் அதற்கு நாம் பதில் அளிக்கப்போவதில்லை. விடிய விடிய இராமாயணம் கேட்டு 'சீதைக்கு இராமன் என்னவேணும்?' என்று கேட்ட புத்திசாலியை யொத்தவர்களென்று மௌனம் சாதிப்பதே அவர்களுக்குக் கொடுக்கத்தக்க விடையாகும்.

இப்படிப்பட்ட மகத்துவம் தங்கிய குளத்தங்கரையில் எல்லாரும் ஸ்நானம்செய்து கொண்டிருக்கும்பொழுது நமது கருப்பனும் கோவிந்தனும் பார்த்துப் பேசிக்கொண்ட இரகசிய சம்பவம் எப்படியோ வெளியாகிவிட்டது. விசாலாக்ஷி அனந்தலக்ஷ்மியைப் பார்த்து கண்ணைச் சிமிட்டி வாயுதடுகளை மூடினவண்ணம் இந்தண்டையும் அந்தண்டையும் அசைத்துச் சிரித்தாள். அனந்தலக்ஷ்மி காலழுக்கைத் துணியால் தேய்த்துக் கொண்டே "ஐயேடி—உவா" என்று, நாக்கை நீட்டி வாந்திபண்ணுபவள் போல வாயைக் காட்டி தான் அருவையப்படுவதை வெளிப்படுத்தினாள். இப்படியே ஒவ்வொருவரும் நயனங்களாலும், புருவங்களாலும், கைச்சைகை முகச்சைகைகளாலும் பலர் பலவிதமாகப் பேசிக்கொண்டார்கள். அந்தச் சைகைகளையெல்லாம் உள்ளபடி யுணர்ந்து அர்த்தம் செய்துகொள்ள அதிக ஊகமும் சூக்ஷ்மபுத்தியும் வேண்டும். அன்றாடு, அந்த இரகசியத்தை முற்று மறிவதற்கு, தக்க உபதேசமும், சிக்ஷையும், வெகு நாட் பழக்கமும் வேண்டும். இந்த சைகைகளையெல்லாம் உற்றுநோக்கிப் பார்த்ததில் இவ்வளவுக்கும் இலக்காயுள்ளவர்கள் அங்கே ஸ்நானத்துக்குவந்துள்ள ஒரு இளம்பெண்ணும் ஒரு நூதன புருஷனுமென்று தெரியவந்தது. அப்பெண்ணின் கண்கள் கட்டைவிரலை நோக்கிக்கொண்டு தலை குனிந்தவண்ணமிருந்தன. ஆனாலும், சற்றுநேரம் உற்றுப்

பார்த்தால் கண்பார்வை மட்டும், தலைகுனிந்த படியிருக்க கடைக்கண்வழியாக பக்கத்தி லிருக்கும் புருஷனைநோக்கிநோக்கித்திரும்பி யது நன்றாகத் தெரிந்தது. இந்த நோக்கை யறிந்த இதர ஸ்திரீகள் நமது விசாலாக்ஷி, அநந்தலக்ஷிமியைப்போல் தங்களுக்குள் பல வாறு பேசிக்கொண்டார்கள். இந்த ஸ்திரீ எவ்வளவு உஷாராயிருந்து ஜாடையாகப் பார்த்தாலும், நூதன புருஷன் அடக்கமின்றி கண்கொட்டாது அவளையேபார்த்த பார்வை யானது எல்லார் கண்ணையும் கருத்தையும் கவரத்தக்கதாயிருந்தது.

ஸ்நானகட்டத்தில் விடபுருஷன் பார்வையி னின்று தங்களைக் காப்பாற்றிக்கொள்ள குல ஸ்திரீகளுக்குத் தங்கள் அச்சம், மடம், நாணம் இவைகளைத்தவிர வேறு காவலாவது கவசமா வதின்மையால், இப்படிப்பட்ட விடபுருஷர் கள் பார்வையைத்தடுக்க எந்த ஸ்திரீக்கும் சக்தியில்லை. அந்த இடத்தைவிட்டு உடனே ஓடிப்போவதைத்தவிர அவளுக்கு வேறு விதி யில்லை யென்பது யாவருமறிந்தவிஷயம். ஆனா லும் இரகசிய மறிந்தவர்களுக்கு இந்தப் பார் வைகளினால் ஸ்திரீ புருஷர்களின் மனோபாவம் வெளியாவது சகஜம். விடபுருஷர்கள் பார்வை யைத்தடுக்க வழியில்லையென்று சொன்னோம். ஆனால் எதற்கும் ஒருவரையறையுண்டு. அது போல் அவர்கள் பார்வைக்கும் ஒரு வரம் புண்டு. அந்த வரம்புகடந்து சென்றால் அவர் கள் அவமானப்பட்டு, சில சமயங்களில் கிட்ட விருப்பவர்களால் உதையும் பட்டுக்கொண்டு போவதுண்டு. இது ஜனசார குலாசார விசே ஷத்தை யொத்ததாதலால் இந்த அளவை ஒருவிதத்தில் வரையறுத்து நிர்ணயிப்பது கூடாமையாம். இந்த சந்தர்ப்பத்தில் இந்த விடபுருஷன் பார்வை அளவுகடந்ததென்று மட்டும் சொல்லும்படியாக விருந்தது. ஏ னெனில் குளக்கரையில் கோள் வேகவைத் துக்கொண்டு உட்கார்ந்திருந்த கருப்பன் கோவிந்தனைக் கூப்பிட்டு "அண்ணே, அந்தப் பாப்பானைப் பாரேன், திருட்டு முழி முழிக்கி றான்! விவஸ்தைகெட்ட பாப்பான்! எங்கே போனாலும் இப்படித்தான் அண்ணேன்; இது ஆனாலும் அநியாயமா யிருக்குதுங்கிறேன்" என்று தனக்குள் உண்டான அருவெறுப்பை வெளிவிட்டுச் சொன்னான்.

ஸத்தியசந்தன்.

---

NIKOLA TESLA'S VIEWS ON HUMAN POSSIBILITY.

## "மனுஷன் தெய்வசக்தி வாய்ந்தவன்."

"அஹம் பிரம்மாஸ்மி"

இத்தேசத்தில் எங்கும் பாடும் யந்திரம் வெளிப்புறப்பட்டு மனுஷன் குரலைப்போலவே பாடுகிறதை யனேகர் பார்த்திருப்பார்கள். இதற்கு 'எடிஸன் போனக்ராப்' என்றுபேர். சப்தத்தைமட்டும் கேட்டால் மனுஷன் குரலா கவேயிருக்கிறது. யந்திரத்தை ஆராய்ந்து பார்த்தால் மெழுக்குப்பூசிய உருளையொன்றும் மிக லேசானமுள்கள் பொருந்திய உலோகத் தால்செய்த உருளையொன்றும் இவையிரண்டும் உருளுவதற்கு ஏற்ற யந்திர சூழ்ச்சியுமன்றி வேறிலலை. ஜடவஸ்துக்களான இவை மனி தன் எந்த இராகத்தில் பாடினாலும் பேசினா லும் அதைப்பிடித்துக்கொண்டு மறுபடியும் மறுபடியும் அந்த இராகத்தை வேண்டிய போதெல்லாம் பாடுகிறது. அப்படியே "ராட் டிஞ்சன்ரேஸ்" என்னும் நூதன ஒளியந்திரம் கல், மண், சுவர், மரம், முதலியவைகளையெல் லாம் புகுந்து அவற்றினுள்ளிருக்கும் வஸ்துக் களைக்காட்டுகிறது. இந்த அதிசயங்களெல் லாம் மனிதயுக்தியால் கண்டுபிடிக்கப்பட்ட வையே, இவைகளைக் கண்டுபிடித்த மனிதன் தேகமானது இந்த யந்திரங்கள் எல்லாவற்றி லும் சிறந்ததாக மிக அதிசயமானதாக விருக் கிறது. இதைப்பற்றி நிகோலா டேஸ்லா என் னும் மின்சாரசாஸ்திர விற்பன்னர் சமீபகாலத் தில் பேசியபொழுது மனிதர்கள் மஹாசக்தி வாய்ந்ததேவர்களே யென்று சொன்னார்.

நிகோலா டேஸ்லா ஆஸ்ட்ரோஹங்கேரியில் பிறந்து அமெரிக்காவுக்குச் சென்று அங்கே மின்சாரசக்தியை யதிநுட்பமாய் ஆராய்ந்து அனேக அற்புதமான சக்திகளைக் கண்டு பிடித்து அவற்றை உபயோகிக்கும் மார்க்கங் களையும் கண்டுபிடித்திருக்கிறார். இவர் மின் சாரசக்தியால் செய்யும் அற்புதங்களால் இவர் ஐரோப்பா அமெரிக்கா தேசங்களில் "The great Wizard of the West" மேற்கத்தி நாட்டு இந்திரஜால மஹாமந்திரவாதி என்று பேர்வாங்கியிருக்கிறார். இவர் குழந்தையைப் பற்றிச்செய்த ஓர் பிரசங்கத்தில் குழந்தை அதிசூக்ஷ்ம அதியற்புதமான ஒரு யந்திரமாயி ருக்கிறது என்று சொன்னார். ஒரு குழந்தை பிறந்ததும், நாதம், உஷ்ணம், ஒளி இவைக ளின் அலை அதன் பூப்போன்ற சரீரத்திற் போய்த்தாக்க அதிலுள்ள நரம்புகள் அந்த அலைமோதலினால் சுருங்கிவிரிகின்றது. அத னால் குழந்தை ஆ என்று வாயைப் பிளக்க காற்று உள்புகுகிறது. அந்தக்காற்று தேகம் சுருங்கும்பொழுது வெளிவருகிறது. இதனால் சுவாசம் ஏற்படுகிறது. இதனால் அதியற்புத அதிசூக்ஷ்மமான இந்த யந்திரம் வேலைசெய்யத் துவக்குகிறது. முதலில் இந்த யந்திரத்துக்குத் தானாகத் தனக்கு வேண்டிய ஆகாரத்தைத் தேடிக்கொள்ளச் சக்தியில்லை. பிறர் போஷிக்க அது நிமிஷத்துக்கு நிமிஷம் மாறி, நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர் கிறது. இப்படி வளர வளர, இந்த மானுட யந்திரம் அதியற்புதமான இன்னுமனேக வேலை கள் செய்கின்றன. அதின் சக்தி வரவர விரிந்து விர்த்தியாகி வளருகின்றது. முன்னி லும் அதிசூக்ஷ்மமான காரணங்களால் பாதிக் கப்பட்டு அக்காரணங்களுக்கிசைந்த காரியங் கள் செய்கிறது. முதலில் ஒருயந்திரமாத்திர மாக விருந்தது வர்வர புத்தி, விவேகம், ஞானம்முதலிய வமைந்த சச்சிதானந்த புரு ஷனாக மாறுகிறது. உலகில் அனுபவம் முதிர முதிர அறிவும் விர்த்தியாகிறது. பிரகிருதி யின் அழகையும் மகிமையையும் கண்டு களித்து தான் பிரகிருதியிற் காணும் அதிசய அற்புதங்களைப்போல் தன்முயற்சியால் சிருஷ் டித்து விளையாடி மகிழ்கிறது. இப்படி பிரகிரு தியிலுள்ள அற்புதங்களை யெல்லாம் தானாகச் செய்ய இச்சைகொண்டு அவ்விச்சை பூர்த்தி யான பின் அதனால் திர்ப்தியடையாது, சொல் லக்கூடாத ஒரு அவாவுண்டாகி அத்தாபத் தைத் தீர்த்துக்கொள்ளத் தபிக்கிறது. இந் தத்தாபம் இவ்வுலகசம்பந்தமானதல்ல. இப்படி மனுஷன் ஹிருதயத்திலுண்டாகும் ஆத்மதா பத்தை சாஸ்திர ஆராய்ச்சியில் முதிர்ந்தவர் கள் தங்கள் சாமர்த்தியத்தால் வெளியிடுகிறார் கள். வெளியிட்டும் திர்ப்தியில்லை. இந்த உல கத்தைமுழுக்க ஜயித்தாலும், பிரகிருதியிலுள் ளவற்றை யெல்லாம் கண்டுகளித்தாலும் அவ் வற்புதங்களைப்போன்ற பல அற்புதங்களைத் தான் செய்துமுடித்தாலும் மனுஷனுக்குண் டான ஆத்மதாபம் தீருகிறதில்லை. மனுஷன் எவ்வளவுக் கெவ்வளவு இவ்வுலகத்தை வென்று பிரகிருதி சக்திகளை யடக்கியாள்கி றானே அவ்வளவுக் கவ்வளவு அவனுக்குள் ளுண்டாகும் ஆத்மதாபம் அதிகரிக்கிறது. இப்படி பூரணக்ஞானகமுயலும் மனிதன் அதி யற்புதமாகச் செய்யக்கூடியது என்ன? அதன் பலன் எப்படிப்பட்டதாயிருக்கும்? என்னும் கேள்விகளுக்கு நிகோலா டேஸ்லா சாஸ்தி ரோக்தமாக சாத்தியமென்று அவருக்குப் பட்ட அபிப்பிராயத்தைப் பின்வருமாறு சொல்கிறார். இந்த அபிப்பிராயத்தை அவர் இரண்டுவருஷங்களுக்கு முன்னே ஒருவாறு தெரிவித்திருப்பதாகவும் இப்பொழுது அதையே விரித்துரைப்பதாகவும் சொன்னார். அவர் வாக்குரை யென்னவென்றால்:—

அங்கிலேய சாஸ்திரக்ஞர்களில் முதல்வரா யிருக்கும் லார்ட் கேல்வின் இவ்வுலகில் நம் புலன்களுக்குப்படும் வஸ்துக்களில் எதையும் அழிக்கமுடியாது. உலகிலுள்ள வஸ்துக்க ளெல்லாம் அணுக்கள் ரூபமாக மாற்றப்பட லாம். ஆனவித்த அணுக்களில் ஓர் அணு கூட்ட வாவது குறைக்கவாவது யாராலும் கூடாது

என்று கண்டுபிடித்து ரூபித்திருக்கிறார். இந்த உண்மையை ஒப்புக்கொண்டு, இந்த அணுப்பிரமாணங்களைப் பின்னும் பிரித்துக்கொண்டு போனால் அது யாருக்கும் புலப்படாததும் எங்கும் நிறைந்ததுமான ஆகாசமாகமாறுகிறது என்று ரூபிக்கலாமென டேஸ்லா சொல்கிறார். இந்த ஆகாசத்துக்கும் அணுப்பிரமாணத்துக்குமுள்ள வித்தியாசமென்னவென்றால், அணுப்பிரமாணமாயுள்ளது இந்த ஆகாசத்தின் அதிவேகமான சுழற்சியொத்த ஒரு அசைவினால் கட்டிப்பட்டு அணுவாகிறதன்றி வேறில்லை. இந்த ஆகாசத்தை அதிவேகமாய்ச் சுழலும்படி அசைவுறச்செய்தால் அது புலப்படுவஸ்துவின் அணுவாகிறது. அணுவினால் அண்டபிண்டங்களனைத்தும் ஆகியிருக்கிறது. ஆகவே மனுஷன் இந்த ஆகாசத்தை அசைவுறச்செய்யும் யந்திரமொன்று கண்டுபிடித்தால் கண்ணுக்குப்புலப்படாத ஆகாசத்தைக் கொண்டு மனுஷன் வேண்டிய வஸ்துக்களைச் சிஷ்டிக்கலாம். ஆகாசத்தின் ஓயா அசைவை நிறுத்தினால் எந்த வஸ்துவும் பழையபடி ஆகாசமாக மாறிப்போய்விடும். இப்படிப்பட்ட யந்திரம் ஒன்று சூழ்ச்சிசெய்து சிருஷ்டிப்பது கூடாத காரியமல்லவென்றும் சாஸ்திரோக்தமாக அது கூடுமானதே யென்றும் அவர் சொல்கிறார். வேதாந்தத்தில் இவ்வித அபிப்பிராயம் சொல்லப்பட்டிருக்கிற தென்றும் அது வீண் மனோபாவமட்டுமோயின்றி சாஸ்திர ரீதியாகச் செய்து முடிக்க சாத்தியமானதாகத் தோற்றுகிறதென்றும் சொல்கிறார். உலகத்திலுள்ள சக்திகளுக்கெல்லாம் மூலாதாரமாயிருப்பது சூரியன். சூரியனுடைய சக்தியைக்கிரகித்து மனிதனுடைய இஷ்டப்படி ஆகாசத்தில் அதிவேகமான சுழற்சியுண்டுபண்ணவும், அந்த சுழற்சியைக்குறைத்து நிறுத்தவும் தக்க யந்திரங்கள்செய்வது அசாத்திய மல்லவென்றும், இவ்வளவு சாத்தியமானால் இந்த உண்மையைக் கொண்டு தகுந்த உபாயங்களால் மனுஷன் தன்னிஷ்டம்போல் புலப்படு வஸ்துக்களையெல்லாம் புலப்படாத ஆகாசமாக மாற்றி, புலனுக்கு ஒன்று மில்லாததுபோல் தோன்றும் ஆகாசத்திலிருந்து அண்டபிண்ட முதலான புலப்படுவஸ்துக்களையெல்லாம் உண்டாகச்செய்யலாமென்று தீர்மானிக்க பாவனா சக்தி அதிகம் வேண்டியதில்லையென்றும் சொல்கிறார். சாத்தியகாரியமான இதை மனுஷன் சாதித்துவிட்டானானால் அவன் தெய்வசக்தியுள்ளவனாவானென்றும், அவனிச்சைப்படி மனுஷன் அண்டபகிரண்டங்களையும் சிருஷ்டித்தழிக்கவல்லவனாவானென்றும், இதுவே அவனது மஹாசித்தியாகுமென்றும் சொல்லுகிறார்.

வேதாந்தத்தில் இந்த அண்டபகிரண்டங்களும் அவற்றிலுள்ள எல்லா ஜடவஸ்துக்களும் பூதாகாசத்திலிருந் துண்டாயிற்றென்னும் சித்தாந்தம் ஸ்தாபிக்கப்படுவதன்றி, இந்த பூதாகாசம் இதிலும் அதிநுட்பமும் சூக்ஷ்மமுமான சிதாகாசத்திலிருந் துண்டாயிற்றென்றும், சித்வெளியாய் சுயம்பிரகாசமாயிருக்கும் இந்தப் பொருளே ஆதிமூலமான மெய்ப்பொருளென்றும் இதற்கு அழிவு நிறைவில்லையென்றும், இதுவே சச்சிதாநந்த ப்ரம்மமென்றும், ஜடஜீவரூபமாயுள்ள பொருள்களெல்லாம் உண்டானது இந்த மூலப்பொருளி லிருந்தேயென்றும் இதையறிவதே மனுஷஜன்மமெடுத்ததன் உட்கருத்தும் ஜன்ம சாபல்யமுமென்றும் கூறுகின்றது. சுருதிவாக்கியங்கள் முறையிடுவதும் இதையே. இந்த உண்மையையுணர இரண்டுவிதமுண்டு. பகிர்முகமாகப் புத்தியைச்செலுத்தி நிகோலா டேஸ்லா அவர்கள் வந்தமுடிவுக்கு வருவது ஒன்று. அந்தர்முகமாக புத்தியைச்செலுத்தி புறத்திலுள்ளதையெல்லாம் அகத்தே கண்டுணர்ந்து ஆதிமூலத்தைக்கண்டு, அந்த நிலையும் கடந்து கண்டவன், காக்ஷி, காணப்பட்டவஸ்து (திருக்கு தரிசன, திர்சியம்) என்கிற திரிபுடியையும் தாண்டி எல்லாம் ஒன்றேயாகி ஏகமாய் நின்று, அந்த ஒன்றே நாம், அதுவே ஜகம், அதுவேயெல்லாமென்றுணர்ந்து எங்கும் நிறைந்த பொருளாய் அகண்டைகாரஸ ஐக்கியத்தில்

மூழ்கியிருப்பதே பிரம்மானந்த மென்றும், அந்த நிலையில்தான் மனுஷனுக்கு அவாவற்று ஆகவேண்டியது அனுபவிக்கவேண்டிய தொன்றுமின்றி பேரின்பசாகரத்தில் மூழ்கியிருக்கிறனென்றும், அதுவே மோக்ஷமும் மனுஷனுக்குரிய முடிவான அந்தமுமென்றும் முறைபிடுகிறது. 'அஹம்பிரம்மாஸ்மி', தத்துவமஸி முதலான மகாவாக்கியங்களின் அர்த்தமும் இதுவே.

---

## REDEEMED BY LOVE.

## அன்புவழிப்பட்டாத்மரக்ஷையடைந்தது.

---

### புண்டரீகபக்தன் சரித்திரம்.

பம்பாய் இராஜதானியில் மகாராஷ்டிர தேசத்தில் சந்திரபாகாநதிக்கும் திண்டிர வனத்திற்கும் இடையே பாண்டரி யென்கிற ஒரு நாடுண்டு. அங்கே ஒரு பிராமணன் இருந்தான். இவன் வைதிக விஷயங்களை வெறுத்து மாதாபிதாக்களை இலக்ஷியஞ்செய்யாமல் மனைவிசொல் தட்டாது காமவிகாரனுப் காலத்தைக் கழித்துவந்தான். இவன் மனைவி இவனைச் சீர்திருத்தப் பலவாறு முயன்றும் அவள் முயற்சியெல்லாம் பலிக்காதுபோகவும், அதனுல் வருத்தமுறுது, ஸ்வாமியின்மேல் பாரத்தைப்போட்டுபதியேதனக்குத்தெய்வமென்று தன் பதிவிரதா லக்ஷணத்துக்குக் குறைவுவராமல் நடந்துகொண்டுவந்தாள். தன் கணவன் என்ன பிழைசெய்தாலும், தன்னையும் அலக்ஷியஞ்செய்து பரத்தையரை நாடிச்சென்றாலும் தன் முகங்கோணுமல் அவனுக்குவேண்டிய சிஷ்ருஷைகள் செய்வதில் சிறிதும் பிசகாமல் அதிஜாக்கிரதையாக நடந்துகொண்டுவந்தாள். உள்ளத்தில் அவளுக்கு எவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்தாலும் அவையெல்லாம் தன்னுடைய ப்ராரத்தவசத்தால் நேர்ந்தனவே யென்று தீர்மானித்துத் தன் புருஷன்மேல் சிறிதும் குற்றங்கூறுமல் அவனுக்கிதமாக நடந்துகொள்வதில் முன்னிலும் அதிக ஜாக்கிரதையுள்ளவளாயிருந்துவந்தாள். இப்படிச் சிலகாலம் செல்ல இவளுடைய பொறுமைக்கும் சாந்தத்துக்கும் உவந்து இவளுடைய கணவன் பரத்தையர்க்கும் பதிவிரதைக்குமுள்ள பேதத்தையுணர்ந்து தன் பத்னியிடத்தில் உள்ளன்பு மிகுந்து அவள்சொல் தவறுமல் நடந்துவந்தான். தெய்வபக்தியாகத்தான் நடந்துவந்ததால் தன் மனோரதம் நிறைவேறியதையுணர்ந்த அப்பதிவிரதாசிரோமணி, தன் கணவனுடைய குணக்கேட்டிற்கெல்லாம் காரணம் அவரிடத்தில் தெய்வ பக்தியில்லாமையேயென்று தனக்குள் உணர்ந்து எவ்விதத்தானும் அவருக்கு தெய்வபக்தியுண்டாகச்செய்ய சமயம் பார்த்திருந்தாள். இப்படியிருக்கும் நாளில் அவ்வூருக்கு ஒரு புராணிகர்வந்து காசிகாண்டத்தை வாசித்துவந்தார். அதைக் கேட்க அவ்வூரிலுள்ள எல்லாரும் மிக்க ஆவலோடு போய்வருவதைக்கண்டு, இப்புண்யவதி தன் புருஷனை அப்புராணிகர் வாசிக்குமிடத்துக்கு அழைத்துக்கொண்டுபோனல் புராண சிரவணத்தால் பக்தியுண்டாகாதாவென்று நினைத்து, ஒருநாள் சாயந்திரம் தன் கணவன் அகங்குளிர்ந்திருக்கும் வேளைபார்த்து புராணங்கேட்கத் தானிச்சைகொண்டிருப்பதால் அவ்விடத்துக்குத்தன்னையழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டாள்.

அதற்கு புண்டரீகன் என்னும் பேருள்ள அவள் கணவன் "அடிபோடி பைத்தியக்காரி, வீட்டில் பலவேலைகளிருக்க அதை விடுத்துப் போய்ப் புராணத்தைக் கேட்டுவருவதால் அன்னமகப்படுமா, சொர்னமகப்படுமோ! கர்மிகள் புண்ணியக்கதை கேட்பதால் பிரயோசனம் ஏதுண்டு? ஒன்றைக் கேட்டால், கேட்டதைக்கிரகித்து அவ்வழியில் நிற்கவேண்டும். சிரவணஞ் செய்து அம்மார்க்கத்தில் மனதை நிலைநிறுத்தாதவனுக்கு நரகமே பிராப்தியாகும். புராணத்தையோதும் ஆதிவருணனே,

ஓதினபடி சாதனஞ்செய்யக்கூடாமல் தமோற்றத்துடனிருக்க நம்மாற்கூடுமோ? ஓதினபடி சாதனஞ்செய்யாப் பேதையரிலும் அதிபேதை யாருமில்லையென்னும் பழமொழி நீ கேட்டறியாயோ! கேட்டுக்கெடுவதிலும் கேளாமல் சும்மாவிருப்பது மிகநலம். அரசன் பறைசாற்றினபடி நடக்காப் பிரஜைகளுக்கு ஆக்கினை நடப்பதுபோல், பகவானுடைய பறையென்னும் புராணாதிகளைக்கேட்டு அந்தப்படி நடக்கத்தவறினல் கடவுளுடைய ஆக்கினைக் குட்படவேண்டும். ஆதலால் நான்வரமாட்டேன்" என்றுசொல்லி மறுத்தான். இதைக் கேட்ட அவன் பத்னி சிறிதும் மனஞ்சலிக்காமல், அவள் முகவிலாசத்தில் அகத்துண்மை விளங்க, மன உருக்கத்தோடு கடவுளைத் தியானித்துத் தன்கணவனை நோக்கி அதி விநயத்தோடு பின்வருமாறு பகரலுற்றாள் :—

"ஸ்வாமி, பரிசவேதியினல் இரும்பு சுவர்ணமாக மாறுமேயன்றி, மண்ணும் கல்லும் பொன்னுமா? அதுபோல் புராணங்கேட்கும் பலரில் ஒருவனே அதன் அர்த்தத்தைக்கிரகித்து நல்வழியில் நடந்து தீயமார்க்கத்தைக் கடந்து மோக்ஷார்த்தத்தையடைவான். மற்றவர்களிற் சிலர் நாடோறும் கேட்க்கேட்கத் துர்க்குணங்கள் நீங்கி சத்குணத்திற் பிரவேசிப்பார்கள். சிலர் பாபகர்மங்கள் செய்ய கிஞ்சித் அச்சமுற்றுச்செய்து நாட்செல்லச்செல்ல மேற்குணத்திற் பிரவேசிப்பார்கள். சிலர் பாபங்களை முன்போற்செய்தாலும் சிரவணம் செய்யும் வேளைமாத்திரம் பிரயோசனப்பட்டு மறுஜன்மத்தில் நற்குணமடைவார்கள். இப்படியிருக்க நீர் 'கேட்டபடி நடக்கச் சக்தியுள்ளவனே புராணசிரவணஞ் செய்யவேண்டு'மென்றுரைப்பது விசித்திரமே. அசிரத்தையுடன் புராணங்கேட்டாலும் புண்ணியலோகம் கிடைக்குமென்று புராணங்கள் மூறையிடுகின்றனவே. எனக்கு விவாகமாகுமுன் நாள்தோறும் புராணங்கேட்பதிலே நாள்கழித்தேன். விவாகமானபின் பதியே தெய்வமாதலால் உமக்குச்செய்யும் பணிவிடையே சகல நோன்புகளுமெனப் புராணங்கேட்பதையும் விடுத்தேன். எனக்கு உம்மிஷ்டப்படியே நடக்கும் அடக்க ஒடுக்கமே மோக்ஷமளிக்கும் மார்க்கமாகும். உமக்கோ சாஸ்திரங்கள் கேட்கவும் அதின்வழியாய் நடக்கவும் சிரத்தைபூரணமாயிருக்கவேண்டும். அன்றி, நீர் புராணங் கேட்கவந்தாலொழிய நான் போகமாட்டேன். காரணம்: பதியைப் பிரிந்துபோய் பாவை புராணங்கேட்பது பகவானைப்புகழ்ந்து பரமசிவனை யிகழ்ந்ததொக்கும்" என்று கல்லுங்கரையப் பேசி, சித்திரப்பாவைபோல் அவன் முன்னின்றாள். அவள் காதலன் புராணம் கேட்பதில் பிரியமில்லையாயினும் இப்படி அன்பு என்னும் கயிற்றால் அவள்கட்டியிழுக்க அதற்குத் தடைசெய்ய ஆற்றலற்றவனாகவிருந்தான். தன்னாலாகாத காரியம் விதிவசம் என்று தன் காதலியின் அன்பு வலைப்பட்ட அவன், அவள்கட்டியிழுப்பதுபோல் இழுக்க வேறுவிதியின்றி அவளுடன் புராணம் வாசிக்குமிடத்துக்குச் சென்றான்.

புராணிகர் சகரரைக்குறித்து பகீரதன் பரமசிவனை நோக்கித் தவஞ்செய்த கட்டத்தை கேட்போர் மனமுருக வாசித்துப் பிரசங்கித்து வந்தார். பகீரதியை அவன் பூமியிற்கொண்டு வந்ததும், சகரர்மேல் கங்கைபிரவாகிக்க அந்தப்பரிசத்தால் அவர்கள் புண்ணியலோகமடைந்ததும், கோஹத்தி, சிசுஹத்தி, பிரமஹத்தி, ஸ்திரீஹத்தி, குருஹத்தி முதலானவை செய்யும் கொடும்பாவிகளானாலும் மந்தாகினியில் ஸ்நானம்செய்தால் யவனர்களாய்ப் போவார்களென்றும் அப்படி அக்கங்கை பகீரதனுக்கு வரங் கொடுத்திருக்கிறாளென்றும் இன்னும் காசியின் விசேஷத்தைப்பற்றி கல்லும் கரைந்துருகும்படி பிரசங்கித்துப் பேசினார். காசியில் மரணமடைந்தவர் வலது செவியில் ஸ்ரீ விசுவநாதர் தாரகமந்திரத்தை உபதேசஞ்செய்கிறாரென்றும், அதனால் மோக்ஷமடைகிறார்களென்றும், எப்பொழுதும் அந்த சுரநதியின்தீரத்தில் மூனீஸ்வரர்கள் வாசஞ்செய்கிறார்களென்றும், அவர்கள் பாதங்

களைப்பரிசித்த புண்ணியவான்கள் அனேகரிருக்கிறார்களென்றும், பிரமாதி தேவர்களெல்லாம் மாறுரூபங்கொண்டு தவஞ்செய்கிறார்களென்றும் விரதத்திற் சிறந்தோர்க்கு இப்போதும் தரிசனந் தருகிறார்களென்றும் புராணிகர் சொல்லிய வார்த்தைகள் புண்டரீகனையறியாது அவன் மனத்தில் பசுமரத்தாணி போல் நன்றாகப் பதிந்துவிட்டன. உடனே அவனுக்கு காசிக்குப்போய் கங்காஸ்நானம் செய்து அங்குள்ள மஹான்களைத் தரிசித்து அவர்கள் அருள் சம்பாதித்து மோக்ஷசாம்பிராஜ்யத்தைத் தேடவேண்டுமென்கிற அவாவுண்டாய்விட்டது. உடனே அவன் காசிக்குப் புறப்பட்டுப் போவேன் என்று புறப்பட்டுவிட்டான். காலதாமதம்செய்யச் சிறிதும் அவன் பொறுக்கவில்லை. அவன் தான் திடீரென்று காசியாத்திரை போவேனென்று புறப்பட அவனுடைய பத்னி தன்னையும் கூட அழைத்துக்கொண்டு போகும்படி மிக வருந்திப் பிரார்த்தித்துக்கொண்டாள். அவள் வார்த்தையைக் கடக்கமாட்டாமல், அவளையும் கூடவே யழைத்துக்கொண்டு அவ்வளவு தூரமான தேசயாத்திரைக்கு வேண்டிய ஆயத்தங்கள் ஒன்றும் செய்யாமலே புறப்படத் துரிதப்பட்டான். பதிக்குவந்தது சதிக்கும் ஆகிறதென்று அவன் மனைவி தன்னை யழைத்துக்கொண்டுபோக உடன்பட்டதே பெரிய காரியமென்று சந்தோஷமாய் அவனோடு பிரயாணமுஸ்தீப்பின்றியே யாத்திரைபோகச் சித்தமாயிருந்தாள். இப்படி தம்பதிகளிருவரும் சடுதி யாத்திரை புறப்பட, அவனைப்பெற்ற தாய் தகப்பன்மார் பிள்ளை திடீரென்று அவசரப்பட்டு இப்படி தூரயாத்திரை போகிறானே, வழியில் நேரிடும் கஷ்டங்களைத் தாங்கமாட்டாமல் வருந்துவானேயென்றாலோசித்து, தாங்கள் அவனுக்கு ஆதரவாக அவன் கூடவே போகத் தீர்மானித்து, வேண்டிய சாமக்கிரியைகளைச் சேகரஞ்செய்து தூக்கிக்கொண்டு அவன் பின்னே சென்றார்கள். பிள்ளையாண்டான் அவர்கள் பின்தொடர்ந்து வருவதை லக்ஷியம் செய்யாமற்போனாலும் பெற்றோர் தங்கள் பிள்ளை வருத்தப்படுவானென்றெண்ணி மனந்தாளாமல், அவனுக்கு உற்றவிடத் துதவியாய் வேண்டிய சகாயஞ் செய்வதே தங்களுக்குப் பெரும்பாக்கியமென்று மிகக் கஷ்டப்பட்டு வழிநடந்து மெய்வருத்தம்பாராது பசிநோக்காது அவனோடு வழிநடந்து சென்றார்கள். பிள்ளை மனம் கல்லு, பெற்றமனம் பித்து என்பதற்குப் பின்னுமோர் உதாரணமாய் இவர்கள் கடுவழி நடந்து காசி யாத்திரை சென்றார்கள். வழியில் பதிவிரதா சிரேஷ்டையான அவன் மனைவி கஷ்டங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு அவளாலான மட்டும் வழிநடந்தும், மேல் நடக்கத்தாளாமல் அயர்ந்து தளர்ந்து மூர்ச்சித்து விழுந்துபோக, புண்டரீகன் காசியாத்திரையை நிறுத்தவும் பொறுக்காது, மனைவியை அந்தஸ்திதியில் விட்டுப்போகவும் மனந்தாளாது சிறிதுநேரம் தத்தளித்து, பிறகு மனதைத் திடப்படுத்திக்கொண்டு, தான் உறமாய்க்கொண்ட தீர்மானத்தால் வலுவுற்றவனாகி, வெயிலில் வாடிய கொழுந்துபோலுமிருந்த தன் மனைவியைத் தோளில் தூக்கிக்கொண்டுபோக லுற்றான். அவ்வுத்தமிக்கு அது ஏலாக்காரியமா யிருந்தும், தன் கணவன் யாத்திரையைத் தடுக்கத் தனக்குச் சக்தியில்லாமையாலும், அவனைவிட்டுப் பிரிந்திருப்பதும் அசாத்தியமா யிருந்தபடியாலும் விதிவசமென்று அதற் குடன்பட்டிருந்தாள். தன் மனைவி வாட்டத்திற்கு மனம் புழுங்கிய புண்டரீகன், வயதுசென்ற தன் பெற்றோர் படுங்கஷ்டத்தைக் கிரகித்திலன். தாயன்பின் பெருமையை யுணர அவனுக்கு இன்னும் பக்குவம் வரவில்லை. அவன் போகிறானென்று பின்வாங்க, பெற்றவர்களுக்கும் மனம் வரவில்லை. இப்படியாகக் கஷ்டப்பட்டுக்கொண்டு இவர்களெல்லாரும் காசி வந்தடைந்தார்கள்.

காசிவந்து சேர்ந்ததும் அங்கு குக்குடமகாரிஷியின் மகிமையை யெல்லாரும் சொல்லக் கேட்டு அவருடைய வாசஸ்தானமாகிய அசியென்னுமிடத்திலிறங்கி, அவரைக்காண அவாக்கொண்டு அதிக பரபரப்போடு அவரகத்திற் சென்று பார்க்க அங்கு அவரைக்காணாமல், அவருடைய ஆச்சிரமத்தில் பணி செய்துகொண்டிருக்கும் பஞ்ச கன்னிகைகளைக்கண்டு அவர்கள் அழகையும் நேர்த்தியையும் முகவிலாசத்தையும் பார்த்து அவர்கள் தேவதைகளென்று நம்பி, அப்படிப்பட்டவர்கள் அவ்வளவு கஷ்டப்பட்டு அனலிலிருந்து பணிசெய்வது பொறுக்காமல், அவர்களுக்காகத் தான் பணிசெய்வதாகவும், அதற்கிசையாவிட்டால் தன் மனையாளைப் பணிசெய்யச் சொல்வதாகவும் சொல்லி அவர்களை வருந்திக்கேட்டுக் கொண்டான். அவர்கள் சிலநேரம் வரையில் இவனுடைய அலட்டலுக்கு பதில் சொல்லாமலிருந்து கடைசியில், இவன் தங்களுடைய இரகசியத்தை யுணர்ந்துவிட்டானென்று அறிந்துகொண்டு அவனுக்குத் தாங்கள் இன்னாரென்பதையும், குக்குடமகாரிஷி அவருடைய பெற்றோர்க்குப் பூஜைசெய்யப்போயிருக்கிறாரென்றும் பஞ்சகங்கைகளாகிய அவர்கள் அவருக்குப் பணிவிடைசெய்து வருவதாகவும், அவர்கள் பாபிகளுடைய கண்களுக்குப் புலப்படாதவர்களாயிருந்தும் பெற்றோரைப் போற்றாத அவன் கண்ணுக்குப் புலப்பட்டது விந்தையென்றும் சொல்லி அவனைப் பலவாறு சிந்தித்து அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வமென்பதின் உண்மையைப் போதித்து மறைந்தார்கள். புண்டரீகன் மூர்ச்சித்து விழுந்து போனான். அவனுடைய மனைவி பக்கத்திலிருந்து சைத்தியோபசாரஞ்செய்து அவன் களைதீர்த்து 'ஸ்வாமி, உங்களுக்குநேர்ந்ததென்ன' வென்று அன்பாதரவாய்க் கேட்டபோது அவன் விழித்துக்கொண்டு, "இது என்ன? நான் கண்டது கனவோ, நனவோ? பஞ்சகங்கைகளும் என் முன்னிருந்தார்களே, அவர்கள் எங்கே போனார்கள்? நான் மகா பாபியானேனே" யென்று பிதற்றலானான். பதிவிரதா சிரோமணியாகிய அவன் மனைவி அவனுக்குக் களைதீர உணவளித்துத்தேற்றி, அவன் மனதிலிருந்த எண்ணங்களை யுணர்ந்துகொண்டு, இவனுக்கு கர்மபந்தங் கழியுங்காலம் நெருங்கியது; நல்லெண்ணம் உதயமாகும் காலம் கிட்டியது; என்று உள்ளத்தில் ஓர்ந்து "ஸ்வாமி, பெற்றோர் பூஜை மிகவும் சிலாக்கியமானதே; அந்தப் பூஜாபல மில்லாததினால் குறைநேர்ந்ததென்றால், அவர்கள் இங்கே தானே யிருக்கிறார்களே; இந்த க்ஷணமே மாதாபிதா பூஜாவிரத மெடுக்கலாமே" யென்று இனிய மொழிகூறி அவர் உள்ளத்துதித்த நல்லெண்ணத்தைத் தூண்டிவிட்டாள். உடனே யவனு முற்சாகங்கொண்டு அந்த க்ஷணம்முதல் மாதாபிதாக்களைப் பூஜைசெய்வதே விரதமாகக் கொண்டுவந்தான். முன் மனைவியைத் தோளில்தூக்கி வர மாதாபிதாக்கள் வழிநடந்து கஷ்டப்பட்டதை நினைத்து மனம் வருந்திநைந்துருகி, அக்குறைதீர, இப்பொழுது அவர்களைக் காவடிகட்டித்தோளில் தூக்கிக்கொண்டுபோய் ஊர் சேர்த்து, அவர்கள் மன முவக்கப் பூஜைசெய்து அவர்கள் அனுக்ரகம் பெற்றபிறகே அவர்களோடும் காசிக்குவந்து ஸ்நானம் செய்வேனென்று, காசிக்குவந்தவன், கங்காஸ்நானம்கூடச் செய்யாமல் திரும்பிவிட்டான். இவன் அந்த க்ஷணம்முதல் மாதாபிதாக்களைப் பூஜிப்பதன்றி வேறு விரதமொன்று மின்றி தானுயிரெடுத்ததற்கு அவர்களைப் பூஜிப்பதே தனக்கு ஜன்ம சாபல்யமென்று கருதி நடந்துவந்தான். இப்படி அவன் தன் மனதை யொருவழிப்படுத்தி நடந்துவந்ததால் உள்ளத்தில் அன்புபெருகி, அழுக்காறு நீங்கி அருள்பெற்று சாக்ஷாத்காரமாய்க் கடவுளைத் தரிசிக்கும் பெரும்பாக்கியம் பெற்றான். இவன் பெற்றோரைப் பூஜிக்கும் விரதம் வகித்துவந்ததுபோல் இவனுடைய மனையாளும் இவனுக் குகந்தவாழ்க்கைத் துணையாயிருந்து இப்படிப்பட்ட மஹாத்மாவைப் பதியாகக்கொண்டு பதிபூஜை செய்

யும் பதிவிரதாபாக்கியம் பெற்றதே பேறென்று ஒளியும் அனலும்போல், தசையும் நகமும் போல் சதிபதிதர்மம் தட்டாது அவரோடொருமனப்பட்டவளாய் வாழ்ந்துவந்தாள். இப்படி இவர் தன் பத்தினியினால் புராணங் கேட்கச்சென்று காசிக்குப்போய் அங்கு முற்றும் மாறிச் சீர்திருந்தினவராய்த் திரும்பிவந்தது முதல் இவருடைய பக்தி மேன்மேல் வளர்ந்துவரக் கடைசியில் இவர் பாண்டரபுரத்தில் பாண்டுரங்கரை ஸ்தாபிக்கும்படியான பாக்கியம்பெற்றார். அதுமுதல் இவருக்குப் புண்டரீக பக்தன் என்கிற பேர் வழங்கத்தொடங்கி, இன்றைக்கும் அப்பேர் பிரசித்தமாயிருந்துவருகிறது. ஸ்ரீமகாபக்தவிஜயத்தில் இவர் ஸ்ரீமந் நாராயணனைத் தன் பக்தி வலையிலிட்டு பண்டரீபுரத்தில் எப்பொழுதும் எழுந்தருளியிருக்கச்செய்த பக்தசிரோமணியென்று இவர் வரலாறு மிகச் சவிஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸதாநந்த சுப்ரமணியம்.

## "யதாகுரு ததாசிஷ்யா"

1901-ம் ௵ ஆகஸ்டு மாதம் 11௳ ஞாயிற்றுக்கிழமை எடப்பள்ளி ஸ்கூல் ஹாலில் கூடியசபையில் பிரசிடெண்டாக விருந்த மிஸ்டர் டி. சி. வெங்கடரமணையர் "உபாத்தியாயர்களுக்கு இன்றியமையாத சிலபுத்திமதிகள்" என்று ஆரம்பித்து பிரசிங்கித்தவைகளைச் சுருக்கிச்சொல்லுகிறேன். அவர் பேசியவைகளையும், எடுத்துக்காட்டிய திருஷ்டாந்தங்களையும், அப்படியே எழுத எனக்கு சக்தியில்லாவிடினும் ஒருவாறு எழுதி இப்பத்திரிகையில் பிரசுரப்படுத்தினால் பலருக்கு முபயோகப்படுமென்று நம்பி எழுதத்துணிந்தேன்.

'யதாகுரு ததாசிஷ்யா' 'ஆசானெவ்வழியோ அவ்வழியே மாணாக்கன்' இவையிரண்டும் ஒரேகருத்துள்ளவைகளாயினும் வெகு சிறந்த பழமொழிகள், உபாத்தியாயர்களாகிய நாம் காலக்கிரமத்தில் பாடசாலைக்கு ஆஜராகாமல் ஒரு நாள் பத்துமணிக்கும், மறு நாள் பதினொருமணிக்கும், மூன்றாநாள் பன்னிரண்டுமணிக்கும் பாடசாலைக்கு வந்தால், பிள்ளைகளும் அதற்குத்தக்கவிதமே நடப்பார்களென்பதில் தடையில்லை. தவிர, அவர்களுடைய நடவடிக்கையானது உபாத்தியாயருடையதை விட அதிகப்படும். ஏனென்றால், 'உபாத்தியாயர் நின்றுகொண்டு ஜலஸ்பரிசம் செய்தால் மாணாக்கன் ஓடிக்கொண்டே செய்வான்' என்று சொல்லுகிறார்களன்றோ? நேரஞ்சென்றுவருகிற பிள்ளைகளை உபாத்தியாயர் தண்டிப்பதை விட, தான் காலக்கிரமத்தில் பாடசாலைக்கு வந்து கிரமப்படி பாடங்களைத் துவக்குவது சிரேஷ்டமானதாகும்.

ஒருநாள் வண்டி சோலையிலுள்ள ஒரு பையனையவன் தகப்பன், காலையில் சுமார் ஒன்பது மணி வேளையில் 'பாடசாலைக்குப்போ' வென்று உத்தரவிட, பையன் 'நான் இவ்வளவு சீக்கிரம் அங்கே போய் என்ன செய்யட்டும், எங்கள் உபாத்தியாயர் வருவதற்கே $10\frac{1}{2}$-11-மணியாகிறது' என்று சொன்னதாகக்கேள்விப்பட்டேன். இது என்ன தர்மசங்கடமான விஷயம் என்பதை யோசியுங்கள். பிள்ளைகளே நம்மிடம் குற்றங்கண்டு கூறுவார்களானால் மற்றவர்கள் சொல்லக்கேட்பானேன்?

ம-ள-ள-ஸ்ரீ, அண்ணாசாமி ராயர் என்ற ஒரு புண்ணியவான் கோயமுத்தூர் கலேஜ் பிராஞ்சு ஸ்கூல் எட் மாஸ்டரா யிருக்கும்பொழுது காலையில் $\frac{1}{2}$-மணிக்கும், மாலையில் இரண்டு மணிக்கும் பாடசாலை கூடும். இவர் குடியிருந்த வீட்டிலிருந்து பாடசாலைக்கு சுமார் நான்கு பர்லாங்கு தூரமிருக்கும். இவர் காலை 7-20-க்கும், மாலை 1-50-க்கும் சரியாய் வீட்டைவிட்டுப் புறப்படுவார். பாடசாலைக்குத் திரும்புகிற பாதையண்டைவர பத்து நிமிஷஞ் செல்லும். இவர் தலையைக்கண்ட ஸ்கூல் சேவகன் உடனே மணியடிப்பான். இவரைக்காணாமல் மணியடிக்கக்கூடாதென்பது உத்தரவு. பிள்ளைகள் உடனே பரபரப்பாய் தங்கள் தங்களிடம் சேர்ந்து உட்கார்ந்து புஸ்தகங்களையெடுத்து படிக்கத்துட
வார்கள். இவர் ஒருநாளாவது அக்காலத்தை
நடக்கப்பட்டவரன்று. வழியில் யாராவது
ஏதாவது பேச்சுக்கொடுத்தாலும், சாவகாச யும்
பேசலாமென்று சொல்லிக்கொண்டே பே படி
யன்றி நின்று தாமதித்துப் பேசமாட்டா ன்
நாள் அதிக தாக்ஷிணியமுள்ள ஒருவர் (120-

பளமுள்ளவர்) இவரை, காலைவேளையில், பாடசாலைக்குப் போகிறபோது தன்னைக் கண்டுவிட்டுப் போகும்படியாகவும், ஒரு அவசரமான காரியமிருப்பதாகவும் சொல்லச்சொல்லி இவர் வீட்டுக்கு ஒரு ஆள் அனுப்ப, இவர் பாடசாலையிலிருந்து வரும்போது காணுவதாகச்சொல்லி யனுப்பினாராம். இதை யறிந்த ஷெ உத்தியோகஸ்தர், காரியம் அவசரமாயிருந்தபடியால், உடனே தானே புறப்பட்டுப் போக, அவர் பாடசாலைக்குப்போகப் புறப்பட்டுவிட, ராயர்வீட்டு வாயலிற் சந்தித்து பேசத்துவக்கினாராம். உடனே நமது ராயர், "இது பெரிய சங்கதி, நான் போய்தான் பாடசாலை மணியடிக்கவேண்டும், தாமதித்தால் என்னிமித்தம் மற்ற உபாத்தியாயர்களும் நூற்றுக்கணக்கான பிள்ளைகளும் வீண் காலம் போக்குவார்கள். நல்லது தாங்கள் எந்த வழியாகப் போகவேண்டும், "பேசிக்கொண்டே போகலாம்" என்று சொல்லி அவரைக் கூட்டிக் கொண்டே கொஞ்சதூரம் வார்த்தையாடிக்கொண்டேவர, வந்தவர் "ஒரு வார்த்தை, கொஞ்சம் நில்லுங்கள் போகலாம்" என்று நின்றுபேச, ராயர் நடந்துக்கொண்டே பதில் சொல்ல, உத்தியோகஸ்தர், "ராயரவாளே முதல் உதவிஉபாத்தியாயருக்கு மணியடித்து பாடசாலையைக் கூட்டும்படி சொல்லிவிடக்கூடாதா" வென்று கேட்டனராம்.

ராயர்.—'உம்மகூட நின்றுபேசினல் வேலையையே ரஜினமாசெய்துவிடக்கூடசொல்வீர்.'

உத்தியோகஸ்தர்—'என் ஐயா ஒருநாள் சற்று நேரமாய்விட்டால் தலையா போய்விடும்? சற்று நில்லுமே.'

ராயர்—"தலைபோனபிறகு பிறர் நம்மை தூஷிப்பதை நம் காதால் கேட்டு விசனப்படவேண்டியதில்லை. ஆனல், உபாத்தியாயர் கிரமமில்லை என்று, நம் தலை போவதற்குமுந்தி அபவாதம்பிறந்து மானம்போவதை நம் காதாலேயே கேட்டு வியாகூலப்படவேண்டிவருமே. பிராணம் க்ஷணபங்குரம், மானமோ ஆசந்திரதாரகம், நான் தங்களை சாயந்திரம் சாவகாசமாய் பார்க்கிறேன்."

என்று சொல்லிவிட்டு சரேலென்று நடந்து குறித்தகாலத்தில் பாடசாலையைச்சேர்ந்து பாடங்களைத் துவக்கினராம். அதாவது தான் சரியானகாலத்தில் ஆஜராகாவிட்டால் சில காரியங்கள் சுத்தமாய் நின்றுபோகிற மாதிரியாக தன்னுடைய காரியங்களை ஏற்படுத்திக்கொண்டால், அதற்கு பயந்தாவது தான் நடக்க, தனக்குள் கிரமமென்பது ஏற்பட்டு மற்றவர்களுக்கும் தூண்டுகோலாயிருக்குமென்பது அவர் கருத்து. இவர் தம்முடைய ஒவ்வொரு வேலையிலும் கிரமத்தை வெகு கண்டிப்பாய் அனுசரித்ததால், கோயமுத்தூர் பிரதான வக்கில்களில் சந்திரன்போல் விளங்கி ஏராளமான திரவியத்தை சம்பாதித்து கீர்த்திபெற்றனர். இவருடைய கிரம வொழுக்கமே அவருடைய விருத்திக்குக் காரணமாயிருந்த தென்பதிலும் சந்தேகமுண்டோ? இதை ஒவ்வொருவரும் நன்ருய் யோசித்து கிரமத்தை கைபிடித்து நடக்கவேண்டியது அவசியமாகும்.

2. கால அட்டவணை ஏற்பட்டிருப்பதின் நோக்கமே, உபாத்தியாயர்களை சீர்திருத்துவதற்கு என்று உறுதியாய் நம்பலாம். இதற்கு விரோதமாக ஒரு நாள்கூட நடக்கலாகாது. சிலர் பொருள்பாடம் பூகோளம் நடத்தவேண்டிய காலத்தில் பார்த்தெழுதல் நடத்துகிருர்கள்.

இப்படியே பலவுள. ஒன்று மில்லாவிட்டால் பார்த்தெழுது, வாய்ப்பாடு எழுது; என்று உபாத்தியாயர்கள் கட்டளையிடுவது வழக்கமாயிருக்கிறது. பார்த்தெழுதல் நடத்துவது வெகு சுலபமானதென்பது இவர்களுடைய அபிப்பிராயம். நன்ருய் யோசிக்கும்பொழுது அப்பாடத்தில் தான் அதிக வேலையிருக்கிறதென் றேற்படும்: ஒவ்வொரு பையன் எழுதுவதையும் அவனவன் சமீபத்தில் போய்ப்பார்த்து செவ்வையாக உருவமாக்கி திருத்தமாய் எழுதப்படாத எழுத்துகளை கறுப்புப் பலகையில் திருத்தமாய் எழுதிக் காட்டவேண்டும். சில பிள்ளைகள் பல எழுத்துகளை தலைகீழாக எழுதுவதைத் தடுக்கவேண்டும்.

'அநேக பிள்ளைகள் 5-8-9 முதலிய பல இலக்கங்களையும் எழுத்துகளையும் தலைகீழாக எழுதுவது வழக்கம். இவைகளை தடுப்பது மிகவும் அவசியம். இப்பாடத்தில் உபாத்தியாயர் ஒரு நிமிஷங்கூட கவலையற்றிருக்க நியாயமில்லை. இருந்தாலோ நெருப்புக்கு அதிகாரம் கொடுத்தமாதிரி பிள்ளைகள் தங்கள் இஷ்டம்போல வரைந்து தள்ளிவிடுவார்கள். உபாத்தியாயருடைய எண்ணம் ஒருக்காலும் நிறைவேருது. இப்படியிருக்க இந்தப்பாடம் கஷ்டம் நாளைக்கு நடத்தலாம், அந்தப்பாடம் சுலுபம், உட்கார்ந்த விடத்தைவிட்டு நகராமல் நடத்தலாம் என்பதாக நினைப்பது சுத்தபிசகு. உபாத்தியாயர் நினைத்தால் ஒவ்வொரு பாடமும் அதிக எளிதாகவும் விமரிசை

யாகவும், உற்சாகத்துடனும் நடத்தக்கூடும். நம்மை யார் கேட்கிறார்களென்று அலக்ஷியமாக நடத்திவந்தால், பிறகு அவர்கள் தொட்டுச்செய்யும் ஒவ்வொரு வேலையும் கிரமமின்றி சீரழிந்து போவதுமன்றி பிள்ளைகளுக்கும் கிரமத்தை யனுசரிக்கிற வழி தெரியாமற்போகிற தென்பதில் தடையில்லை.

மகா-ராா-ஸ்ரீ, கின்னையர் என்ற நார்மல் பாடசாலைத்தலைவர் எப்பொழுதும் எந்த வேலையையும் திருத்தமாயும் கடவுள் சம்மதமாயும் மனப்பூர்த்தியாயும், காலாகாலத்தில் திருப்திகரமாய் முடிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் (Do everything to your own satisfaction) "ஒவ்வொன்றையும் உன் மனதிற்கு திருப்தியாகச் செய்" அல்லது மனச்சாக்ஷிக்கு விரோதமின்றிச் செய். என்று துண்டுக் காகிதங்களில் எழுதி, தான் எழுதும் மேஜை, புஸ்தகங்கள்வைக்கும் அலமாரி முதலிய பல விடங்களில் ஒட்டிவைத்துக்கொண்டிருப்பார். இவர் ஒட்டிவைத்தவைகள் இவருக்கே தூண்டுதலாயிருந்தன. ஒரு அற்ப பென்சல் சீவினாலும் நேர்த்தியாக செய்வாரேயன்றி ஆத்திரப்பட்டு சீவி ஐந்துதடவை ஆணியை முறிக்கமாட்டார். இவர் ஒருதினமாவது தன் வேலையில் கிரமந்தப்பியாவது கவலையின்றியாவது யிருக்கமாட்டார். பாடசாலை நேரத்தில் அடிக்கடி வெளியில் போவதாவது, யாரோடாவது பேசிக் கொண்டிருப்பதாவது இவரிடத்தில் காண்பது அருமையிலும் அருமை. ஒவ்வொருநாளும் சிற்சில கிரமமில்லாத பிள்ளைகளின் தகப்பன்மார்களைக் கண்டு பேசித் திருத்தவேண்டுமென்பது இவர் கையாண்ட கோட்பாடு. ஒவ்வொரு உபாத்தியாயரும் சில கோட்பாடுகளை தங்களுடைய திட்டங்களாக ஏற்படுத்திக்கொண்டு நடக்கவேண்டுமேயன்றி மனம்போனவாக்கில் நடக்கக்கூடாதென்று தினமும் வற்புறுத்திக் கூறுவார். உங்களிடத்தில் ஒரு காரியமாவது கண்டிப்பா யிருக்கட்டுமென்றும், அப்படியிருந்தால், உங்களை பலர், ஆ! இந்த உபாத்தியாயரா! ஒருகாலமும் அப்படிச்செய்திருக்கமாட்டார், என்று பேசிப் புகழும்படி உங்களுடைய சிற்சில காரியங்களையாவது திட்டமாய் ஏற்படுத்திக்கொள்ளுங்களென்றும் அடிக்கடி சொல்லுவார். ஆகையால், நீங்கள் கால அட்டவணையை மீறி நடக்கவேகூடாதென்று திட்டஞ் செய்துக்கொள்வது அத்யாவசியகம். அநேக இன்ஸ்பெக்டர்கள் பிள்ளைகளை கால அட்டவணையில் பரீக்ஷிப்பது வழக்கமுண்டென்பதை நீங்கள் மறக்கலாகாது.

3. உங்களில் அநேகர் படித்த பாடசாலை உபாத்தியாயர்களானபடியால் அப்பாடசாலைகளிலுள்ள கஷ்டங்களை நன்கு அறிந்திருக்கிறீர்கள். ஆயினும் உங்களுடைய விடாமுயற்சியினால் வெகுகாலம் சென்றபிறகே திருந்தி நேர்மைக்கு வரக்கூடியதும், நீங்கள் தற்கால முதற்கொண்டே அதுவிஷயத்தில் அத்தியந்தகவலை செலுத்தி பாடுபடவேண்டியதும், இகபரங்களுக்கு சாதகமானதுமான ஒரு விஷயத்தைப் பற்றி நான் உங்களுக்குச் சொல்லவேண்டியிருக்கிறது. அதை நீங்கள் அறிந்திருந்தாலும் அவ்வளவாக கவனஞ் செலுத்தியிருக்கமாட்டீர்களென்று நம்பலாம். அதாவது "பாடசாலைகளுக்கு அதிக பிள்ளைகளைச்சேர்ப்பது." அதற்காக, இதற்குமுன் யாம் சொன்ன அண்ணாசாமி ராய்யரைப்போல பாடசாலை கூட 5-அல்லது 10-நிமிஷத்திற்குமுந்தி நீங்களும் வீட்டைவிட்டு புறப்பட்டால் போதாது. குறைந்தது பாடசாலைகூடும் நேரத்திற்கு ஒருமணி முந்தியாவது வீட்டைவிட்டு புறப்படவேண்டும். கிரமமில்லாத பிள்ளைகளை அவர்களுடைய வீடுகளில் தினப்படி சந்தித்து உங்களுடைய முழுசாமர்த்தியத்தையும் இவ்விஷயத்தில் காட்டி,

> "இன்சொலாலன்றி இருநீர் வியனுலகம்
> வன்சொலா லென்று மகிழாதே"

என்பதைக் கடைப்பிடித்து பிள்ளைகளின் மனதைக் கொள்ளைகொண்டு, தகப்பன் பாடசாலைக்குப் போகவேண்டாமென்று தடுத்தாலும், பையன் நின்று விடாமல் வரத்தகுந்த விதமாய் புத்திபுகட்டியும், பெற்றோர்கள் தங்கள் சிறு குழந்தைகளை எடுக்க பெரியபிள்ளைகளை யமைத்தும், சிறிய வயதிலேயே கூலிக்கு அனுப்பியும், தேகசுகத்தைக்கெடுத்து மூடனாக்கியும் வருவதை பலதந்திர உபாயங்களால் தடுத்துக்கண்டித்து, பிள்ளைகளை கூடவே கூட்டிக் கொண்டு காலக்கிரமத்தில் பாடசாலைக்குவந்து பாடங்களைத் துவக்கி நடத்துவதுடன் சன்மார்க்க ஒழுக்கங்களை பிள்ளைகளுக்குக் கற்பித்துக்கொண்டு வாருங்கள். இவ்வழக்கத்தை கொஞ்சகாலம் அநுசரித்து வருவீர்களானால், பிள்ளைகள் பாடசாலைக்கு தானகவே வருவார்களென்பதிலும், பெற்றோர்களின் மனதும் திரும்பி கல்வியில் அக்கறையுள்ளவர்களாவார்களென்பதிலும் சந்தேகமில்லை. ஆடுமாடுகள் கூடவன்றோ ஒருநாள் தின்று உருசிகண்ட விடத்திற்கு மறுபடியும் செல்கின்றன. மழையும் கூடவன்றோ ஒருநாள் பொழிந்த விடத்தில் மறுபடியும் பொழியுமென்றும் வழிய்றிந்துக்கொண்டதென்

றும் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். இவ்விஷத்தை கவனத்தில் வைத்து நடக்காத உபாத்தியாயர்கள் தங்களுக்குள்ள கௌரவமான நாமத்தை இழந்துவிடுவார்களென்பதில் தடையில்லை.

தன் பெண்சாதிக்கு கண்ணிருந்தால் மற்ற புருஷர்களை பார்ப்பாளென்ற எண்ணத்தால் எப்படி ஒருவரும் குருடியை விவாகஞ்செய்துக்கொள்ள விரும்பமாட்டார்களோ அதுபோலும், ஒரு குழந்தை தாய்ப்பால் குடித்து 'புறக்கேறி' இறந்துவிட்டதைக்கண்ட மற்றவர்கள் எப்படி தன் குழந்தைக்கு பால்கொடுக்க மறுக்கமாட்டார்களோ அதுபோலும், படித்ததினால் தானே ஒருவன் (Forgery) தப்புக்கையெழுத்துப்போட்டு தண்டனையடைந்தானென்று தங்கள் பிள்ளைகளை கல்விகற்பிக்க ஒருவரும் மறுக்கமாட்டார்களென்பது திண்ணம்.

4. நீங்கள் மறுநாள் நடத்தவேண்டிய பாடத்தைப்பற்றி முந்திய நாளிலேயே தயார் செய்து வைத்துக்கொள்ளவேண்டியது அதிக முக்கியமானது. எப்படியென்றால் பாடம் நடத்தும்பொழுது சில பதங்களுக்கு அர்த்தம் தெரியாமற் போகலாம். ஒரு பாடத்தை நடத்தவேண்டிய மாதிரி திடீரென்று ஞாபகத்திற்கு வராமற் போகலாம். எவ்விதமாக பிள்ளைகளைக் கேள்விகேட்கவேண்டுமென்பதும், பிள்ளைகள் வாயால் இன்னவிடையை வரவழைக்கவேண்டுமென்பதும் அறியாமற் போகலாம். முந்தியே (Notes of lessons) "பாடக்குறிப்பு" தயார் செய்துக்கொண்டுவந்து நடத்தினால் பதப்பொருள் தெரியாமற்போக நியாயமில்லை. பாடத்தை உற்சாகத்துடனும், கம்பீரத்துடனும் நடத்த சாதகமாகும். சந்தேகமறக் கேள்விகேட்கலாம். சரியான விடைகளை பிள்ளைகள் வாயிலிருந்து வரவழைக்கலாம். தெரியாவிட்டால் கேள்வியை படிப்படியாய் சுலபமாக்கலாம். உத்தேசப்படி குறித்த காலத்தில் பாடத்தை முடித்து நூதன விஷயங்களை பிள்ளைகள் கற்றுக்கொண்டார்களாவென்று பரீக்ஷைசெய்து மன உற்சாகங்கொள்ளலாம். இவ்விதக்குறிப்பு B.A, M.A., வகுப்புக்குக் கற்பிக்கிற உபாத்தியாயர்களுக்கே அவசியமாகவிருக்கும்பொழுது நம்போலியர்களுக்கு கேட்பானேன். இவ்விதக்குறிப்பின்றி உபாத்தியாயர்கள் பாடசாலைக்கு வருவது தம்மிடம் கற்கும் பிள்ளைகள் முதற்கொண்டு கேலி செய்வதற்கிடமாகும். எப்படி என்றால் ஒருநாள் இந்த பாடசாலையிலேயே ஒரு உபாத்தியாயர் ஒரு மாணுக்கனைப்பார்த்து.—

"18 கொட்டைகளில் பாதிக்கொட்டைகள் எவ்வளவு" என்று கேட்டார். முதலில் பையன் 36-என்று சொன்னான். உபாத்தியாயர் அதை ஒப்புக்கொள்ளாமல் மறுபடியுங்கேட்க பையன் மயங்கி நின்றான். உபாத்தியாயர் மறுபடியும் திருப்பித் திருப்பி அதேகேள்வியைக்கேட்டார். இவருடைய எண்ணமோ 18-ல் பாதி 9-என்று மாணுக்கன் சொல்லவேண்டுமென்பது. ஆனால் தன்னுடைய கேள்வி தப்பு என்பதையும் அதை மறுபடி சுலபப்படுத்திக்கேட்கத் தெரியாமலும் மயங்கினார். அதை யாமே திருத்தினோம். பிள்ளைகள் முன்பாக வேறு ஒருவர் அதைத்திருத்த நேருவதும் பிள்ளைகள் அவற்றைகவனிப்பதும் கேலிக்கிடமென்பது ஏற்படவில்லையா? ஆகையால், அடுத்தநாள் பாடத்தை முந்திய நாளே தயார்செய்துக்கொண்டுவந்து சொல்லவேண்டுமென்பது உங்கள் மனதில் குடிகொண்டிருக்குமென்று எண்ணுகிறேன்.

கடைசியாக 'அவரன்றியணுவசையாது' என்று சொல்லப்பட்டிருக்கிற பழமொழிப்படி எவ்விஷயத்தைச்செய்தாலும் கடவுள் அதிலுள்ள உண்மையை உள்ளதுள்ளபடி யறிகிறாரென்பதை ஒவ்வொருவரும் ஞாபகத்தில் வைப்பது அவசியம் சுபம்.

ஆரிசவுடர்,
உபாத்தியாயர்.

---

"THE INDIAN LADIES' MAGAZINE."

## மாதர்க்காக மாதரால் நடத்தப்படும் ஓர் இங்கிலீஷ் பத்திரிகை.

"இந்தியமாதர் பத்திரிகை" யென்னும் பொருள்பட மேலே குறித்துள்ள இங்கிலீஷ்பேர் வாய்த்த பத்திரிகையொன்று சென்ற ஜூலைமாசம் முதற்கொண்டு சென்னையில் பிரசுரமாய் வருகிறது. இப்பத்திரிகை இத்தேசத்து இங்கிலீஷ்படித்த மாதர்க்குபயோகமாகும்படி இந்தியமாதரால் நடத்தப்பட்டு வருகிறது இதற்கு ஆசிரியராயிருப்பவர் இங்கிலீஷில் எம். ஏ. பட்டம் பெற்று விளங்கும் ஸ்ரீமதி கமலா சத்தியநாதன். இவருக்குதவியாக இன்னும் அனேகம் இந்தியமாதர்கள் இப்பத்திரிகைக்கு அதிரசமான விஷயங்கள் இங்கிலீஷில் எழுதிவருகிறார்கள். இந்திய மாதர்களின் க்ஷேமத்தை நாடியுழைக்கும் அங்கிலேய மாதர்களும் இதற்கு ஆதரவாயிருந்து விஷயங்களெழுதி வருகிறார்கள். இப்பத்திரிகை

யின் முக்கியநோக்கம் கற்றுத் தேறிய இந்திய மாதர்கள் தங்கள் எண்ணங்களைத் தெரிவித்துக்கொள்ளவும், தங்கள் கருத்தைமுடித்துக்கொள்ளவும் சாதனமான ஒரு பத்திரிகையின்றியிருக்கும் குறையை நிவர்த்தித்து இந்தியாவில் பெண்பாலார் முன்னுக்கு வருவதற்கு ஹேதுவான விஷயங்கள் ஏற்பாடுகளை பகிரங்கமுயற்சி செய்து விர்த்திக்குக் கொண்டுவர வேண்டுமென்பதாம். இப்பத்திரிகையின் முதலிரண்டு சஞ்சிகைகள் நம்முன்னில்லை. நம்முன்னிருக்கும் 3-வது சஞ்சிகையைப்பார்க்க அது நாலாவிதத்திலும் மிக நன்முகப்பொருந்தி யமைந்து மிகமேலாகக் கொண்டாடத்தக்கதாகவிருப்பதுஸ்பஷ்டமாகவிளங்குகிறது. பத்திரிகை கண்ணுக்கு ரமணீயமாகவிருப்பதோடு விஷயங்களும் வாசிக்க ரஸமாகவும் மனோகரமாகவுமிருக்கின்றன. நம்முன்னிருக்கும் 3-வது சஞ்சிகையில் முதல் விஷயம் "ஐரோப்பிய இந்திய மாதர்களின் கூட்டுறவைப்பற்றியதாக விருக்கிறது. இதேவிஷயமாக இதற்குமுன்னொரு சஞ்சிகையில் இப்பத்திரிகையின் ஆசிரியர் எழுதியிருந்த விஷயத்தை ஆமோதித்து, அங்கிலேய சீமாட்டியொருவர் தம் அபிப்பிராயத்தை வெளியிட, இந்திய சீமாட்டியொருவரும் அதன் கீழ் அவர் அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறார். இந்தியாவில் வசிக்கும் ஆங்கிலேய மாதர்கள் இந்தியமாதர்களோடு கலந்து பழகி ஆங்கிலேயருக்கும் இந்தியர்க்கும் இப்பொழுதுள்ள பிரிவினையை யொழித்து அவர்களை ஒரு மனப்பட்டவராகச் செய்ய முயற்சிக்கவேண்டுமென்பது ஆங்கிலேய சீமாட்டியின் கருத்தாயிருக்கிறது. மிகவும் மெச்சத்தக்க இக்கருத்து நிறைவேறுவதிலுள்ள இக்கட்டுகளையும் இடையூறுகளையும் பற்றி 'சுகுமாரி' யென்று கையொப்பமிட்ட இந்திய சீமாட்டி அவர் அபிப்பிராயத்தை யெழுதியிருக்கிறார். இந்த விஷயத்தைப்பற்றி எவ்வளவு எழுதினும் எழுதலாம். காரியத்தில் இதையனுஷ்டிக்குங்காலம் வரும்பொழுது இருதரத்தாரும் தங்கள் தங்கள் ஆசாரவுபசார வழக்கமே பெரிதென்று நினைக்கும் நினைப்பைவிட்டு மற்றவர் மனமுவக்க நடந்து கொள்வதையே முக்கியக்கருத்தாகக்கொண்டு தத்தம்மிடத்துள்ள மனக்கோளாறுகளை யடக்கிவர வேண்டியது முதலவசியம். இவ்வடக்க மிருந்தாலன்றி மற்றப்பிரயத்தனங்களெல்லாம் பிரயோஜனப்படா.

இரண்டாவது, எலிஜபெத் பாரெட் ப்ரௌணிங் என்னும் பேர்பெற்ற அங்கிலேய கவியான மாதரசின் சரித்திரம் லேடி ஆர்பத்நட் அவர்களால் எழுதப்பட்டிருக்கிறது. ஹிந்து மாதர்க்கேற்ற நிறைகுணம் எத்தன்மைத்தாயிருக்கவேண்டுமென்பதைப் பற்றி ஸ்ரீகிஷ்ணசர்மாவும், ம-௱-௱-ஸ்ரீ சுந்தரராமய்யரும் எழுதியிருக்கிறார்கள். ஹிந்துமாதர்களுக்குரிய நிறைகுணம் வேதங்கள் சாஸ்திரங்களில் நமது ரிஷிகள் சொல்லியிருக்கிற பார்யாலக்ஷணங்களே விரும்பத்தக்க பூஷணமாம் என்று சுந்தரராமய்யரவர்கள் அபிப்பிராயப்பட்டிருப்பதை ஸ்ரீகிஷ்ணசர்மா வாதித்து சீதையும், சாவித்திரியும் புருஷனுக்குகந்த பார்யைகளானாலும் புத்தி விர்த்தியில்லாதவர்களாதலால் இக்காலத்துக் கேற்றவர்களாகார்கள். தன்னைப்போல் சாஸ்திரப்பயிற்சியில்லாத ஸ்திரீ தனக்கு தேகசுகானுபவத்துக்கு எவ்வளவு உகந்தவளானாலும் அவளோடு மனமொத்து சந்தோஷித்து வாழ்வது தன்னால் கூடாத காரியமென்று அவர்களை யிகழ்ந்து, நமது ஸ்திரீகள் ஐரோப்பிய நாகரிகமும் கல்விப்பயிற்சியும் பெற்றாலன்றி அவர்கள் இக்காலத்துக் கற்றுத்தேறிய புருஷர்களுக்கு உகந்த வாழ்க்கைத்துணையாகார்களென்று சொல்கிறார். சுந்தரராமையர் அவர் அபிப்பிராயத்திலுள்ள குறைகளை யெடுத்துக்காட்டி மேற்கத்தியாரது தற்கால எண்ணங்களிலும் நம்முடைய பூர்வீகருடைய எண்ணங்களே மேலானவை யென்று சாதித்து காலதேச வர்த்தமானங்கள் மாறிவரும் இச்சமயத்தில் நாம் வெகுகாலமாய் நீடித்துள்ள நமது மேலான உத்தம நோக்கங்களை மாற்ற முயற்சித்தால் வாய்த்தவிடும் போய் அடுப்பு நெருப்புமணைந்த அம்மையார் கதியாவோமென்று சொல்கிறார். இது விஷயமாக இக்காலத்தவர் தற்கால சாஸ்திரப்பயிற்சியைப் புகழ்வதில் பூர்வீகர்களுடைய மேலான சித்தாந்தங்களையெல்லாம் இகழ்ந்துவரும் ஒருதுர்க்குணம் காட்டி வருகிறார்கள், செல்வவிர்த்திக்கு இச்சாஸ்திரங்கள் மிக உபயோகமானவையானால் ஆத்மக்ஷேமத்துக்குப் பூர்வீகர் கண்டு பிடித்த மேலான சித்தாந்தங்களை விட இக்காலத்து சாஸ்திரவிற்பன்னர் அதிகமாகக் கண்டுபிடித்தது ஒன்றுமில்லை. அதையுள்ளபடியுணரவே தமோறுகிறார்கள். இக்காலத்து சாஸ்திரஞர்களெல்லாம் ஒன்றுகூடினாலும், கிறிஸ்துநாதர் அவருடைய சிஷ்யர்களுக்கு மலைமேல் செய்த உபதேசத்தில் சொன்னதை விட மேலான உண்மையைக் கண்டுபிடித்துச் சொல்ல சாத்தியமில்லையே. அப்படியே, ஸ்ரீகிஷ்ணன் அர்ச்சுனனுக்குப் போதித்ததைவிட மேலான உண்மைகளை இவர்கள்.

போதிப்பதற்கில்லையே. அப்படியிருக்க உண்மையையுணர்ந்துகொள்ள உள்ளபடி முயற்சிக்காமல் நுணிப்புல்மேயும் இளங்கன்றுகளைப்போல் மனம்போனபடி பேசுவதேனோ? நமது மாதர்கள் இக்காலத்துக் கேற்றபடிப்புப் படிக்கட்டும். ஆனால் அவர்கள் கல்விப்பயிற்சி மனோப்பயிர்ச்சியின் முடிவான நோக்கம் சீதை, சாவித்திரியைப்போல் அவர்கள் ஆகவேண்டுமென்பதாயிருக்கவேண்டுமன்றி, மிஸ்ஸஸ் அன்னி பெஸன்டைப்போலிருக்கவேண்டுமென்பதல்லவென்பதில் சிறிதும் சந்தேகத்துக்கிடமில்லை. ஸ்ரீகிஷ்ணசர்மா மிஸஸ் அன்னிபெஸன்டைப் புகழ்கிறார். அன்னிபெஸன்ட் அம்மாளோ சீதையைப்போல் பூர்ணத்துவம் பெறுவதே பெண்ணுகப்பிறந்தோர் அடையத்தக்க பெரும் பாக்கியமென்கிறார். பம்பாயில் ஒரு ஹிந்து மாது தெலுங்கில் 'மாதர் மஞ்சரி' யென்று எழுதியிருப்பதை ஸ்தோத்திரம் செய்து, இன்னும் இப்படி கற்றுத் தேறி கிரந்தகர்த்தாக்களாய் விளங்கும் இதர இந்தியமாதர்களைக் குறிப்பிட்டு ஒரு நல்லவியாசமெழுதப்பட்டிருக்கிறது. இப்பத்திரிகாசிரியரின் தங்கையும் பி. ஏ. பட்டம் பெற்றவருமான மிஸ் கிஷ்ணம்மா, நீலகிரிக்குப்போய் வந்ததைப்பற்றி அவ்விடத்துக் காக்ஷியை வர்ணித்து எழுதியிருப்பது படிக்க மிக ரஸமாக விருக்கிறது. மற்றப்படியுள்ள கதைகளும், கவிகளும், பாலலீலாவிநோதங்களும், விலாசங்களும் அதிமதுரமாக விருக்கின்றன. இப்பத்திரிகை மாதர்களுக்காக மாதர்களால் நடத்தப்பட்டு வந்தாலும், மாதர்க்குற்றது மனிதர்க்குற்றதாதலால், அவர்களுடைய புத்திவிர்த்தியிலும் க்ஷேமத்திலும் நாட்டமுள்ள ஆடவரெல்லாரும் வாங்கி வாசிக்கத்தக்கதென்பதிற் சந்தேகமில்லை.

---

## மதுரைத் தமிழ்ச்சங்கம்.

இச்சங்கம் "மதுரைத் தமிழ்ச்சங்கம்" எனப் பெயர்பெற்று வழங்கலாகும்.

இச்சங்கத்தின் முக்கிய நோக்கம், தமிழ்ப் பாஷையை அபிவிர்த்தி செய்தல். அந்நோக்கம் பின் வருமுறைகளை அநுசரித்து நிறைவேற்றலாகும்.

(1) மாணுக்கர் தமிழ் கற்கும் வண்ணம் ஒரு கலாசாலை அமைத்தல். அவர்கள் ஊக்கத்துடன் கற்க உதவிசெய்தல்.

(2) அச்சுப்பிரதிகளும் பழைய ஏட்டுப்பிரதிகளும் அடங்கிய ஒரு தமிழ்ப்புத்தகசாலை அமைத்தல்.

(3) ஒரு நல்ல தமிழ் அச்சியந்திரசாலை ஸ்தாபித்து சங்கத்தின் பெயரால் பெரும்பான்மை இலக்கிய இலக்கண விஷயங்களும் மற்றும் பாஷாபிவிர்த்திக்காகிய விஷயங்களும் அடங்கிய ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை பிரசுரித்தல்; அச்சுக்குவராத அரிய நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தல்.

(4) அரிய தமிழ் நூல்கட்கு உரை எழுதுவித்தல்; பிறபாஷைகளின் உபயோகமுள்ள நூல்களை மொழி பெயர்த்தல்; தற்கால சாஸ்திர சம்பந்தம் உள்ள பல நூல்கள், தேசசரித்திரங்கள், புலவர் சரித்திரம்முதலியன இயற்றுவித்தல்; பழைய சாசனங்களைத்தேடி வெளிப்படுத்தல் முதலியன.

(5) வருடந்தோறும் ஒரு தமிழ் வித்வத்சபை கூட்டி அதில் தமிழ்ப்பாஷையின் அபிவிர்த்திக்கு வேண்டிய விஷயங்களைப் பேசுதல்; தமிழ் கற்றவர்கட்கு, அவ்வவர் தகுதிக்கேற்பச் சிறப்புப்பெயரளித்தல்; அரங்கேறும் நூல், உரைகளை அங்கீகரித்தல் முதலியன.

(6) தமிழ்நூல், உரை எழுதி வெளிப்படுத்துவோர்க்கு அவசியமாயிற் பொருளுதவி புரிதல்.

(7) தமிழ்நூல்களின் அருமை பெருமைகளைப் பலரும் அறியும் வண்ணம் அடுத்தடுத்துப் பிரசங்கங்கள் செய்வித்தல்; அவற்றைத் தனிப்பத்திரிகைகள் வாயிலாய் அச்சிட்டுப் பரவச் செய்தல்.

(8) கலாசாலைகளில் தமிழ் அபிவிர்த்தியைக் கவனித்துவருமாறு இராஜாங்கத்தாரையும், சர்வகலாசாலைச் சங்கத்தாரையும் வேண்டிக்கொள்ளல் முதலியன.

### சங்கத்து வித்துவான்கள்.

1. (1) தமிழ்வித்வான்கள்.
   (2) வடமொழி வித்வான்கள்.
   (3) ஆங்கிலத்தமிழ் வித்வான்கள்.
   (4) ஆங்கில வடமொழி வித்வான்கள், என இந்நான்கு திறத்தினராவர்.
2. இவர்கள் செய்தற்குரியன.
   (1) சங்கத்தில் அச்சிடும் செந்தமிழ் நூல்களைப் பரிசோதித்தல்.

(2) வேண்டும் செந்தமிழ்நூல், உரை இயற்றல்.

(3) வடமொழி, ஆங்கிலம் இவற்றினின்றும் வேண்டுவனவற்றைத் தமிழில் மொழி பெயர்த்தல், அவற்றைப் பரிசோதித்தல்.

(4). பழைய ஏட்டுப்பிரதிகள், சாசனங்கள் சேர்த்துச் சங்கத்துக்கனுப்பல்.

(5) மாணுக்கர்களின் சோதனைக்கு வேண்டும் வினக்கள் குறித்தல். விடைகளைச் சோதித்தல்.

(6) மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகைக்கு வேண்டும் விஷயங்கள் எழுதல்.

(7) தமிழில் உபந்யாஸங்கள் புரிதல்.

(8) வருடந்தோறுங்கூடித் தமிழ்ப்பாஷையின் அபிவிர்த்திக்கு வேண்டியன ஆராய்தலும், தமிழ் கற்றவர்க்கு அவ்வவர் தகுதிக்கேற்ற சிறப்புப்பெயர் அளித்தலும், புதியவாய் அரங்கேறும் நூல்களை அங்கீகரித்தலும், இன்னுஞ் சங்கத்திற்குக் கல்வியால் வேண்டுவன புரிதலும் ஆம்.

சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை.

**1.** பிலவஞு ஆவணிமீ" கக-ம்வ-ஆகிய 1901ஞு ஸெப்டம்பர்மீ" 15உ மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் ஓர் அங்கமாகிய செந்தமிழ்க் கலாசாலை தொடங்கலாகும்.

**2.** இக்கலாசாலைக்கு வேண்டும் பொருண் முழுதையும் இராமநாதபுரம் மாட்சிமைதங்கிய சேதுபதியவர்கள் உதவுகின்றமையால், அவர்கள் பெயர்பெற்று இஃது **"சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை"** என வழங்கலாகும்.

**3.** இக்கலாசாலையில் செந்தமிழிலக்கண விலக்கியங்களும், சைவத்திருமுறைகளும், வைணவ திவ்யப்பிரபந்தங்களும் கற்பிக்கலாகும்.

**4.** இவற்றுடன் வடமொழியும், காலத்திற்கேற்ற ஆங்கிலேயமும் வேண்டுமளவாற் கற்பித்தலாகும்.

**5.** இக்கலாசாலையின் வரையறைகட்கு உடன்பட்டுக் கற்கும் வறியமாணுக்கர்கட்கு, உண்டி முதலிய நல்லுதவிகள் புரியலாகும்.

**6.** இக்கலாசாலையில் வருடந்தோறும் நிகழும் சோதனையில் நன்று தேறிய மாணுக்கர்கட்கு அவ்வவர் தகுதிக்கேற்பச் சிறப்புப் பெயரும் நன்கொடையும் அளித்தலாகும்.

**7.** இக்கலாசாலையிற் கற்க விரும்புவோர் 1901ஞு ஸெப்டம்பர்மீ" 13உ காலை 8-மணிக்கு மதுரை சேதுபதி ஹைஸ்கூலில் வந்து சேர்தல் வேண்டும். அப்போது தமிழ்ச் சங்கத்து அக்ராஸனுதிபதியவர்கள் முதலியோரால் மாணுக்கர்களைத் தெரிந்து சேர்த்தலாகும்.

**8.** ஆங்கில பாடசாலைகளிற் கற்போர்க்குத் தமிழறிவு மிகுதற்பொருட்டு மாலையில் சர்வகலாசாலைத் தமிழ்ப் பாடங்களையே கற்பித்தலாகும். இவர்களில் மெட்ரிகுலேஷன் வகுப்பினர், மாதம் ஒன்றுக்கு அணு நான்கும், எப். ஏ. வகுப்பினர், மாதம் ஒன்றுக்கு அணு ஆறும், அவ்வவ் மாதத்தின் ஐந்து தெய்திக்குள் கொடுத்தல் வேண்டும்.

**9.** இவர்கட்கு 1902-ம் வருடம் முதல் ஒவ்வொரு நவம்பர் மாதத்திலும் மேற்குறித்த பாடங்களிலே **தமிழ்ச்சங்கத்தார் நடத்துஞ் சோதனையில்** தலைமையிற்றேறும் முதல் ஐவர்க்குக் கீழ்க்காட்டியவாறு பரிசளித்தலாகும்.

பரிசின் விபரம்.

(1) மெட்ரிகுலேஷன் வகுப்பில் தேறிய மாணுக்கர்கட்கு.

| | | |
|---|---|---|
| முதலாவது | பரிசு | ரூ. 30. |
| இரண்டாவது | ஷை | ரூ. 25. |
| மூன்றாவது | ஷை | ரூ. 20. |
| நான்காவது | ஷை | ரூ. 15. |
| ஐந்தாவது | ஷை | ரூ. 12. |

(2) எப். ஏ. வகுப்பில் தேறிய மாணுக்கர்கட்கு.

| | | |
|---|---|---|
| 1-வது | பரிசு | ரூ. 40. |
| 2-வது | ஷை | ரூ. 35. |
| 3-வது | ஷை | ரூ. 30. |
| 4-வது | ஷை | ரூ. 25. |
| 5-வது | ஷை | ரூ. 20. |

(3) பீ. ஏ. வகுப்பில் தேறிய மாணுக்கர் கட்கு.

1-வது பரிசு ரூ. 50.
2-வது ஷை ரூ. 45.
3-வது ஷை ரூ. 40.
4-வது ஷை ரூ. 35.
5-வது ஷை ரூ. 30.

**10.** இச்சோதனைக்கு உடம்படுவோர் அவ்வவ் வருடத்துச் செப்டம்பர்மீ 15உக்குள் இத்தமிழ்ச்சங்கக் காரியதரிசியவர்கட்கு மெட்ரிகுலேஷன் முதல் முறையே ரூபா அரை, ஒன்று, இரண்டு செலவுப்பொருள் அனுப்பல்வேண்டும்.

**11.** இச்சோதனைகள் மதுரை, சென்னை, கும்பகோணம், திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, இந்நகரங்களில் சங்கத்தாராற் குறிக்குந்தெய்தியில் குறிக்கும் இடத்தில் நிகழ்த்தலாகும்.

**12.** மதுரை ஜில்லாவிலுள்ள ஆங்கிலப்பாடசாலைகளில் 3, 4, 5 வகுப்பு (Forms) களில் வித்யாவிசாரணைத் தலைவரால் குறிக்கப்பட்ட அவ்வத்தமிழ்ப் பாடங்களைக் கற்று இச்சங்கத்தார் புரிகின்ற சோதனையிற்றேறும் மாணுக்கர்கட்கு இளமையிலே தமிழில் ஊக்கம் உண்டாம் வண்ணம் பின்னுள்ளவாறு பொருட்பரிசளித்தலாகும்.

(1) 3-வது பாரம் சோதனையிற்றேறும் மாணுக்கர்கட்கு.

1-வது பரிசு ரூ. 5.
2-வது ஷை ரூ. 3.

(2) 4-வது பாரம் சோதனையிற்றேறும் மாணுக்கர்கட்கு.

1-வது பரிசு ரூ. 6.
2-வது ஷை ரூ. 4.

(3) 5-வது பாரம் சோதனையிற்றேறும் மாணுக்கர்கட்கு.

1-வது பரிசு ரூ. 7.
2-வது ஷை ரூ. 5.

**13.** சர்வகலாசாலையோர் நடத்தும் எம். ஏ. (M.A.) சோதனையின் பொருட்டுக் கற்பவர்க்கும், மற்றுந் தமிழறிவு மிக வேண்டுவோர்க்கும் காலையில் தனியே கற்பித்தலாகும்.

### பாண்டியன் புத்தகசாலை.

1. இச்சங்கத்துக்கு அச்சுப்பிரதிகளும் பழைய ஏட்டுப் பிரதிகளும் அடங்கிய ஒரு புத்தகசாலை அமைத்தலாகும். பிலவஞு ஆவணிமீ நகலுக்கு 1901-ம்ஞு ஸெப்டம்பர்மீ 15உ தொடங்கலாகும்.

2. அது "பாண்டியன் புத்தகசாலை" எனப் பெயர் பெறும்.

3. அது காலை 7-மணி முதல் மாலை 6-மணி வரை திறந்திருக்கும்.

4. படிக்க விரும்புவோர் புத்தகசாலை புரப்பவர் அநுமதிபெற்று ஆங்குள்ள பதிவுப்புத்தகத்தில் தம்பெயரை முதலில் பதிவு செய்து பின் கொடுபடும் தனிப்பத்திரிகையிற்கண்ட விவரணங்களை எழுதிக் கொடுத்தபின் வேண்டும் புத்தகங்களைப் பெறலாம். அவற்றை ஆங்கிருந்தே கூடியவரை கருத்துடன் உபயோகித்துத் திரும்பக் கொடுத்தல்வேண்டும்.

5. அக்கிராசனுதிபதி, காரியதரிசி இவர்கள் எழுத்துமூலமான அநுமதியின்றி வேறு எவரும் எவ்வித காரணத்தானும் புத்தகங்களை வெளியே எடுத்துப்போக இடம் பெருர்கள்.

---

## SHORT STORY.

### THE VISION OF KANDAR.

### கந்தன் செய்த மனோராச்சியம்.

நாமும் இவன்மாதிரி அநேகவிஷயங்களில் மனோராச்சியம் செய்திருக்கிறோம். யார்தான் செய்ததில்லை. வாஸ்தவமான வெளிலோகத்தில் நமக்கு, அப்பிரியமும் அதிருப்திகரமுமான ஸ்திதியிலிருந்து உண்டாகும் விசனத்தைமறக்கும்படி, எல்லாம் நமது மனோரதத்திற்கிசைந்து, ஒருவிதத்திலும் குறைவில்லாமல், ஒரு உலகத்தை நமது மனதில் நிர்மாணித்து, அதின் ஆநந்தத்தைப் பூரணமாக நாம் அனுபவிப்பது ஸஹஜந்தானே. அந்த மானஸிக உலகத்தில் துக்கம் என்பதே கிடை

யாது. எப்போதும் உல்லாஸமும், பிரகாசமும் நிறைந்து குதூஹலமுள்ளது. இப்படிப்பட்ட உலகத்தின் ஆநந்தத்தை யனுபவித்து சில சமயங்களிலாவது, நிஜ உலகத்தின் அழகின்மையை மறக்காவிட்டால் அநேகமாய் மனிதர்களுக்கு வேறுவித சுகம் இல்லையென்றே சொல்லலாம். மனவருத்தத்துடன் பள்ளிக்கூடத்திற்குப்போகும் சிறுவர்களுக்கு, இடையே விடுமுறைநாள் போலவும், நாள்தோறும் ஒரே மாதிரி ஆகாரம் உண்கிற நாவிற்கு இனிய சிற்றுண்டி போலவும் இருக்கிற, மானஸிகவுலகயாத்திரை, முன்னேர்ந்த கஷ்டத்தை மறக்கவும் பின் வருவதைச் சகிக்கவும் நமக்கு சக்தியைத்தருகிறது.

இது எவ்வாறாயினும்சரி, இந்தக்கதா நாயகனை கந்தனுக்கு ஒரு விதத்திலாவது சுகம் இருந்ததாகத் தெரியவில்லை. சிறுவயதில் தாய் தகப்பனாரும், பெரியவனானபிறகு அவன்பிரிய பார்யையான கடுமுகியும், அவன் வாயசக்கினாலும் கையசக்கினாலும் குற்றம் என்று வசவுகளாலும் அடிகளாலும் அவனுக்கிருந்த கொஞ்சம் மனோதைரியத்தையும் போக்கிவிட்டபடியால் தன்னிடத்திலேயே அவனுக்கு நம்பிக்கைகிடையாது. அதிக சுலபமானகாரியங்களைத்தவிர வேறொன்றும் அவன் செய்யத் துணிகிறதேயில்லை. செய்யவாரம்பித்தால் மனதிலிருக்கும் திகிலால் அதைத் தப்பிதமாகத்தான் செய்வான். தப்பிதத்துக்காக கடுமுகியிடம் உயர்ந்த மரியாதையான துடைப்பப்பூசையும் பெற்றுக்கொள்ளுவான். இந்தப் பாக்கியசாலிக் கந்தனும் கூட, சுகம் இன்னதென்று அறியாதவனானாலும், மேலேசொன்ன மானஸிக உலகத்தை அடிக்கடி எட்டிப் பார்ப்பதுண்டு. அதிலும் விசேஷமாய், இந்தக் கதை குறிக்கிறநாளில், என்னகாரணத்தாலோ அவனுக்கு இதுவரையிலும் தோன்றாத யோசனைகளெல்லாம் தோன்ற ஆரம்பித்தன. தன் ஜன்மம் வீணாய் சுகமற்ற ஜன்மமாய்விட்டது. வீட்டைக்காக்கிற நாய்கூட, யஜமானனுக்குச் சந்தோஷம்வந்த சமயத்தில் தட்டிக்கொடுக்கப்படுகிறது. தன்னைத்தவிர எல்லா ஜந்துக்களும் கொஞ்சமாவது சுகத்தை இடைக்கிடையேனும் அனுபவிக்கின்றன: தனக்குத்தான் சுத்தமாகக்கிடையவே கிடையாது என்று வெகு துக்கத்துடன் ஒரு தூணில் சாய்ந்து கொண்டு எதிர்ச்சுவரிலடித்திருந்த ஒரு ஆணியை உற்றுப்பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தான்.

மிக்க கஷ்டப்படுகிற மனிதர்கள், தங்கள் ஆத்மாவைக் குட்டிச்சாத்தானுக்கு விலையாக்கி அதற்குப்பதிலாக 20, 25 வருஷங்களுக்கு தங்கள் இஷ்டப்படி அது அடிமையாக வேலை செய்யும்படி ஏற்பாடு பண்ணுவதுண்டு என்று இவனுக்கு யாரோ சொல்லியிருந்தார்கள். இப்போது அது அகஸ்மாத்தாய் இவன் ஞாபகத்துக்குவந்தது. வந்தும், ஐயோ! இப்படி என்னாத்துமாவைப் பறிகொடுத்தாவது 25 வருஷத்துக்குச்சுகம் அடையலாமே, என்னாத்துமா, பின்னால் சுகத்தையோ கஷ்டத்தையோ அனுபவிக்கப்போகிறதென்று யாருக்கு என்ன நிச்சயம். இப்போதிய சுகதுக்கங்களைத்தானே நாம் பிரத்தியக்ஷமாகக்காண்பது. ஆகையால், அந்தப்பிரசித்தி பெற்ற குட்டிச்சாத்தான் நேரில் வந்தால், நான் இம்மாதிரி உடன்படிக்கையைத் தாமதமில்லாமல் நிறைவேற்றியே விடுவேன் என்று யோசிக்கலானான்.

இப்படி யோசித்த மாத்திரத்தில், கண்டவர்களுக்கு எல்லாம் சிரிப்பையுண்டாக்கக்கூடிய உருவமுள்ளதாய், சுமார் $1\frac{1}{4}$ அடி உயரமான ஒரு ஜந்து அவன் எதிரில் வந்து நின்று, புன்னகைகொண்டு, இனிய குரலுடன் "என் பிரியமுள்ளநண்பா, என்னைப்பற்றி நீ நினைத்தாய். இதோ நான்வந்துவிட்டேன். பயப்படாமல், நினைத்ததை நினைத்தபடியே சொல்லு" என்று வெகுவிரைவாய்ப் பேசிற்று. நேரில் வராதென்று நிச்சயம் இருந்தபோது தைரியமாய் நினைத்த கந்தனுக்கு, இப்படி அதைநேரில் கண்டதும் கொஞ்சம் பயந்தான். தேக சுகத்தைக்காட்டிலும் ஆத்துமாவைக்

காப்பாற்றுதல் முக்கியம் என்று பெரியோர் சொல்லக்கேட்டிருந்த கந்தனுக்கு, ஆத்மாவை இலகுவாய் விற்றுவிட மனம் துணியவில்லை. இதைக்கண்ட அந்தக்குட்டிச்சாத்தான் தன்னாலானமட்டும் தந்திரமாய் அவனுக்கு தைரியம் சொல்லிப்பார்த்தது. அப்போதும் அவன் சந்தேகப்படுவதைக் கண்டு, வெகு கோபம் கொண்டதுபோல் முகத்தைச்சுளித்து "ஆனால் நான் போகிறேன், நீ உன்கடுமுசியோடு சுகமாய் வாழ்ந்திரு" என்று கடுகடுப்புடன் சொல்லிப் புறப்படவே, கந்தன், அது போய்விட்டால் திரும்பிக் காணமுடியாதோவென்று பயந்து "அப்பா, இரு இரு, அவசரப்படாதே" என்று அதை நிறுத்தி, என்ன கஷ்டம் பின்னால்வந்தபோதிலும் இப்போது, தான் அனுபவிக்கிறதைக்காட்டிலும் பெரிதாகாது என்று மனதைத் திடப்படுத்தித் தான் முதலில் மனதில் நினைத்தபடி ஒப்பந்தம் செய்யத் தயாராயிருப்பதாய்ச் சொன்னான். அந்தக்குட்டிச் சாத்தானும் சரேலென்று எங்கிருந்தோ, நிபந்தனைகள்கண்டு எழுதியிருந்த ஒரு பத்திரத்தை அவன்புறம் நீட்டி "இதோ இந்தவிடத்தில் கையெழுத்துப்போடு; சாதாரணமசியினால் எழுதினால் போதாது, உன்ரத்தத்தால் எழுத வேண்டும். இந்தக்கையெழுத்துப்போட்ட நிமிஷம்முதல் சரியாய் 25 வருஷம் ஆகிறவரையில் நான் உனக்கு அடிமையாயிருந்து சொல்வது எல்லாவற்றையும் தவறாமல் கேட்பேன் அப்படி கேட்கத் தவறினால் இந்த ஒப்பந்தம் ரத்தாய்ப்போய்விடும். நான் செய்யவேண்டிய காரியங்கள்யாவும் நான் சரியாய்ச்செய்து விட்டால் உன்னாத்துமா என்னைச்சேர்ந்தது" என்று சொல்லிற்று. கந்தன் இந்த நிபந்தனைகளுக்கு உடன்பட்டு துணிவுடன் கையெழுத்துப் போட்டான்.

இப்படி ஒப்பந்தம் நிறைவேறி $24\frac{3}{4}$ வருஷம் வரையில் கந்தன் வெகு சுகமாகக் காலம் கழித்தான். எந்தெந்தவழியால் தான் சுகம் அனுபவிக்க முடியுமோ அந்தவழியை யெல்லாம் முடிவாக்கினான். ஒரு மனோரம்மியமான உத்தியானவனமும், அதின் நடுவில் ஒரு கம்பீரமான மாளிகையும், அதன் சமீபத்தில், இடைவிடாது கொஞ்சிக்குலாவியோடும் சிற்றருவியும், நம்போன்ற ஏழை மானிடர் மனதால்கூட நினைக்கக்கூடாத இன்னும் அநேகவிதமான விநோதங்களையும், தேவச்சிற்பியான விசுவகர்மாவும் சீர்திருத்தத்துக்கு வழிகாட்டக்கூடாதபடி நிர்மாணம் செய்யத் திட்டம் பண்ணினான்.

என்ன சுகப்பட்டால்தான் லாபம்? நாளாக நாளாகக் கந்தனுக்கு விசாரம் மேலிட்டது. இன்னும் கொஞ்ச நாளில் தான் சாகவேண்டுமே. என்னசெய்தால் அக்கொடிய விதியைத் தப்பலாம் என்று யோசித்துப்பார்த்தான். ஒரு வழியும் தோன்றவில்லை. இப்படி, ஒப்பந்தம் முடிவாகவேண்டியதற்கு முதல் நாளும் வந்துவிட்டது. இன்னும் ஒருநாள்தான். இனிமேல் மணிக்கணக்குத்தான் இவன் எண்ண முடியும். இவ்வாறு, ஆபத்து நெருங்கின சமயத்தில், வழிதெரியாமல், இருட்டில் போய்க்கொண்டிருக்கிற பிரயாணிக்கு ஆழ்ந்தகுழியின் ஓரத்தில் வந்தசமயத்தில், ஒரு மின்னல் வெளிச்சம்போல், கந்தனுக்கு ஒரு ஜாஜ்வல்யமயமான எண்ணம், திடீரென்று தோன்றிற்று. இச்சமயத்தில், இன்னும் கொஞ்சம் மணிநேரத்தில் இவனது ஆத்மா நமக்கு நிச்சயமாய்க் கிடைக்குமென்று கர்வம்கொண்டு, ஜய சூசகமான முகத்துடன் ஓங்கிவளர்ந்து $1\frac{1}{4}$ அடிப் பிரமாணம் வந்துநின்ற குட்டிச்சாத்தானைக் கண்டான். கண்டவுடன் தன் ஹிருதயத்தில் புதிதாய் ஜனித்திருக்கும் சந்தோஷத்தை வெளிக்காட்டாமல் அதைப்பார்த்து சொல்லுகிறான். "நீ இதுவரையில் எனக்கு அடிமையாயிருந்து ஒருவிதத்திலாவது நான் குறை கண்டுபிடிக்க முடியாமல், எல்லாவற்றையும் நிறைவேற்றி வந்தது வாஸ்தவம். எப்படியிருந்தபோதிலும், நாளைக்கு என்னாத்மா உன்னைச்சேரப்போகிறது நிச்சயம். அதற்குமுன் நீ எனக்குச்செய்யவேண்டிய காரியம் ஒன்று உண்டு" என்று சொல்லுமுன் அந்தக் குட்டிச்

சாத்தான் "அதற்கென்ன பிரமாதம் என்ன வேணுமென்றாலும் இதோ செய்கிறேன்" என்றது. கந்தன் கொஞ்சம் சிரித்துக் கொண்டு "நல்லது, நான் காரியம் இன்ன தென்று சொன்னபிறகு நீ அவ்வளவு தயாராயிருக்கிறாயா பார்ப்போம். இருந்தால் நீ தைரியசாலிதான். காரியம் என்னவென்றால்:—நீ கடுமுகியைக் கலியாணம் செய்து கொண்டு அவளோடு இனிமேல் வாழ்ந்திருக்க வேண்டியதுதான்" என்றான். இதைக் கேட்டதும் அந்தக் குட்டிச்சாத்தானுக்கு உடம்பெல்லாம் வியர்த்து விட்டது. அங்கங்களெல்லாம் பயத்தால் நடுங்க ஆரம்பித்தன. நாக்குழறிற்று. "ஐயோ! அதைத்தவிற வேறு என்னசெய்யச்சொன்னாலும் செய்கிறேன்." ஹிமயமலையைத் தரைமட்டம் பொடியாக்கிவிடுகிறேன். சமுத்திரமுழுதும் வற்றடிக்கிறேன். சந்திர சூரியர்களைத் தெற்கு வடக்காக போகச்சொல்லுகிறேன் இன்னும் இதுமாதிரி, சாதாரணமாய் அசாத்தியம் என்று நினைக்கக்கூடிய எது வேண்டுமானாலும் செய்கிறேன். நீ சொன்னதுமாத்திரம் என்னாலாகாது" என்று கதறிற்று. "அதெல்லாம் சரியல்ல, நான் சொன்னதைக் கேட்கவேண்டும்; இல்லாவிட்டால் ஒப்பந்தம் வீணாய் விடும்" என்றான் கந்தன். "அடே பாபி! உனக்கு யாரோ இந்த உபாயம் கற்றுக்கொடுத்துவிட்டார்கள். உன் ஆத்துமாவைத் தப்புவித்துக்கொண்டாலும் நான் விட்டுவிடுகிறேன்: நீ சொன்னகாரியம் மாத்திரம் செய்ய மாட்டேன், மாட்டேன்" என்று அலறிக் கொண்டு ஒப்பந்தம் எழுதியிருந்த பத்திரத்தைக் கிழித்துவிட்டு பறந்துபோய்விட்டது. இதைக்கண்ட கந்தன் சந்தோஷம் அடக்க முடியாமல் "ஹா ஹா" என்றான். அதே சமயத்தில் அவன் தலையில் அடியும்விழுந்தது. "என்ன ஹா ஹா, நீ நாசமாய்ப் போக, எத்தனை நாழி இப்படி சோம்பேரியாய் உட்கார்ந்துகொண்டு சுவற்றைப் பார்த்துக்கொண்டிருக்கிறது, எழுந்திரு, சமையல் பாத்திரங்களைத் தேய்த்துவை" என்று கடுமுகியின் குரல் காதில்விழவே கந்தன், சூடுண்ட பூனைபோல் எம்பிக்குதித்துப் பாத்திரம் தேய்க்க வாரம்பித்தான்.

அவன், ஆழ்ந்து யோசித்தபடியால், மேற்சொன்னதெல்லாம் அவனுக்கு உண்மையாய்த் தோன்றிற்றோ, அல்லது தூங்கிப் போய் ஸ்வப்பனம் கண்டானோ நமக்குத் தெரியாது. அவனுக்கும் தெரியாது. ஆனால் அதிக பிரியமான ஸமயத்திலாவது, தான் கண்ட கனவைக் கடுமுகியிடம் சொல்லியிருப்பானென்று நாம் சந்தேகிக்கவேண்டியதில்லை.

என். வி. ராகவன்.

---

காலஞ்சென்ற

## ஸர். சேஷாத்ரி ஐயர்.

மைசூர் திவானாயிருந்து சமீபகாலத்தில் தேக அசௌக்கியார்த்தம் வேலையைவிட்டு நீங்கிய ஸர். கு. சேஷாத்ரி ஐயர் அவர்கள் செப்டம்பர்மீ 12௳ இராத்திரி 2-மணிக்கு பெங்களூரிலுள்ள அவருடைய வாசஸ்தானத்தில் காலஞ்சென்றதைக் குறிப்பிட விசனிக்கிறோம். இவர்பாலக்காட்டுக்குச் சமீபத்திலுள்ள குமாரபுரம் என்னும் அக்கிரகாரத்தில் ஏழைப் பிராமணர்கள் வயிற்றில் பிறந்தார். கள்ளிக்கோட்டை கவர்ன்மெண்ட் ஸ்கூலில் படித்துப் பேர்பெற்று பி. ஏ. பரீக்ஷைக்குச் சென்று அதில் தேறியபின் பி. எல். பரீக்ஷைக்குச்சென்று அதிலும் தேறினார். கள்ளிக்கோட்டை கலெக்டராபீசில் துவிபஷிகாரகவிருக்கும்பொழுது மைசூர் சமஸ்தானத்தில் சிரஸ்தேதார் வேலைபெற்று அங்குசென்றார். பிறகு திவான் இரங்காசார்லு காலத்தில் இவருடைய திறமைக்காக அவரால் மிக அபிமானித்துக் கொண்டாடப்பட்டார். 1883-ம் வருஷத்தில் திவான் இரங்காசார்லுஇறந்தபொழுது இவர் டிஸ்திரிக்ட் ஜட்ஜாகவிருந்தார். காலஞ்சென்றமைசூர் மஹாராஜா அவர்கள் இவரை

அவருக்குப்பின் திவானாக நியமித்துக்கொண்டார். அதுமுதல் சென்ற வருஷம் வரையில் இவர் மைசூர் சமஸ்தானத்தின் துரைத்தன பரிபாலனத்தை நடத்தும் முக்கிய அதிகாரியாயிருந்து அந்த சமஸ்தானத்தைப் பலவிதத்திலும் நல்லஸ்திதிக்குக் கொண்டுவந்தார். மாஜி மஹாராஜா கலகத்தாவில் திடீரென்று காலஞ்சென்றபொழுது இவரையே முக்கிய அதிகாரியாக நியமிப்பது கூடாதென்று அனேகர் ஆக்ஷேபிக்க மஹாராணியை ரிஜெண்டாக நியமித்து இவருடன் இன்னும் மூன்றுபேர்களைக் கௌன்ஸிலில் மெம்பர்களாக நியமித்து இவரை அக்கௌன்ஸலுக்குத் தலைவராக நியமித்தார்கள். இந்த ஏற்பாடு செய்ததுமுதல் இவருக்கு உற்சாகம் குறைந்து போனதாகச் சொல்லப்படுகிறது. சென்ற வருஷம் ஆகஸ்டு மாசமுதல் இவருக்கு தேகசௌக்கியம் சரியாகவில்லாமலிருந்தது. கொஞ்சகாலம் ரஜாவெடுத்துக்கொண்டும் குணப்படாமையால் இந்த வருஷமுதலில் தேகசௌக்கியார்த்தம் தென்னிந்தியாவிலுள்ள க்ஷேத்திரங்களையெல்லாம் விஜயம்செய்து ஸ்தலயாத்திரை செய்து ஸ்வாமிதரிசனம் செய்து வந்தார். அதிலும் குணப்படாமற்போக வேலையைவிட்டு நீங்கிப்போகத் தீர்மானித்தார். இவர் வேலையைவிட்டு நீங்கிய பொழுது இவருக்கு மைசூர் மஹாராணியவர்கள் இவர் மைசூர் சமஸ்தானத்துக்கு உழைத்த உழைப்பை நன்குமதித்து இவருக்கு 4-லக்ஷ ரூபாய் நன்கொடையளித்தார்கள். இத்தொகையை சமீபகாலத்தில்தான் இவர் கவரன்மெண்டு பொக்கிஷத்திலிருந்து வட்டியோடுகூட வாங்கிக்கொண்டார். இவர் மைசூருக்குச்செய்த உதவிகளெல்லாவற்றிலும் பெங்களூருக்குத் தண்ணீர்க்குழாய் வைக்கச்செய்த ஏற்பாடும் சிவசமுத்திரத்தில் காவேரியாறு உயர்ந்தமட்டத்திலிருந்து வீழ்வதினாலுண்டாகும் ஜலசக்தியை மின்சாரமுண்டாக்க உபயோகித்து அம்மின்சார சக்தியைக்கொண்டு பலதொழில்கள் நடக்கக்கூடியதாகச்செய்த ஏற்பாடும் மிகவிசேஷமாம். இவர் தம்முடைய அபாரசக்தியினாலும், புத்தியுக்தி விவேக விசேஷத்தினாலும் இந்தியாவிலுதித்த பேர்போன இராஜதந்திரிகளில் ஒருவராகப் பேரெடுத்துப் புகழ்பெற்றார். இவருடைய பத்தினியார் இவருக்குமுன் காலஞ்சென்றுவிட்டார். இவருக்குப்பின் 4-பிள்ளைகளும் 2-பெண்களுமிருக்கிறார்கள். முதலிரண்டு பிள்ளைகளும் மைசூர் சமஸ்தானத்திலே உயர்ந்த உத்தியோகத்திலமர்ந்திருக்கிறார்கள்.

## உபகார சங்கங்கள்.

### எடப்பள்ளி உபாத்தியாயர் சங்கம்.

நீலகிரிஜில்லா எடப்பள்ளி உபாத்தியாயர் சங்கம் ஜூலைமீ 13உ கூடியசபையில் சங்கத்தின் காரியநிர்வாக சம்பந்தமாகச் சில ஏற்பாடுகள் செய்யப்பட்டதில் "ஒவ்வொரு சபையிலும் ஒவ்வொரு உபாத்தியாயர் சுகாதார விஷயமாயாவது வித்யாவிஷயமாயாவது ஒரு வியாசம் எழுதிக்கொண்டுவந்து படிக்கவாவது பிரசங்கம் செய்யவாவது வேண்டும்" என்று தீர்மானிக்கப்பட்டது. வித்யாவிஷயத்தில்சிரத்தையற்றிருக்கிற படகர் முதலிய அவ்விடத்து ஏழைச்சாதிப் பிள்ளைகள் பரிக்ஷைகட்டணம் கட்ட சக்தியற்றவர்களாதலால் கட்டணமின்றி அவர்களைப் பரிக்ஷைக்கு எடுத்துக்கொள்ளவேண்டுமென்று மனுச்செய்துகொள்ளத் தீர்மானித்ததானது இப்பொழுதுள்ள டிபார்ட்மெண்டு ரூல்களுக்கு மாறாகவிருத்தலால் இதை கிரமப்படி இலாகா அதிகாரிகள் ஆலோசனையிலெடுத்துக் கொள்வது கூடாமையாகும். விதிகள் ஏற்படுத்துவது ஒரு பெரிய டிபார்ட்மெண்டில் எல்லா வேலைகளும் ஒழுங்காய் நடந்தேறவேண்டுமென்னும் கருத்துக்கொண்டாதலால், நினைத்தபடியெல்லாம் விதிக்குவிலக்கு ஏற்படுத்துவது பூர்வ உத்தேசத்துக்கு மாறாகவிருப்பதன்றி முடிவில் உசிதமாகவுமிராது.

---

1901-ம் ஆகஸ்டுமீ 11உ கூடிய எடப்பள்ளி உபாத்தியாயர் சங்கத்தின் கூட்டத்தில் உபாத்தியாயர்களும் மற்றவர்களுமாக சுமார் 15-பேர்கள் வந்திருந்தார்கள்.

சங்கவிஷயமான சில அம்சங்கள் கவனித்துப் பைசல் செய்தானபின், "N. ஆரிகவுடர், சுகா

தாரவிஷயமாய் எழுதிக்கொண்டு வந்ததை வாசித்தார். Y. N. பெள்ளிகவுடர் அதை ஆமோதித்துச் சிலவற்றை கூறினர். பிரசிடெண்டு அதைப்பற்றியே சிலவைகளைக் குறிப்பிட்டுப் பேசினர்." பிறகு "உபாத்தியாயர்களுக்கு இன்றியமையாத சில புத்திமதிகள்" என்ற விஷயமாய் பிரசிடெண்டு சில சங்கதிகளை வெகுநேரம் பேசினர். அடுத்த மீட்டிங்குக்கு K. பெள்ளிகவுடர், 'ஜலம்' என்ற விஷயமாய் ஒரு வியாசமும், K. மடியாகவுடர் 'கோபம்' என்ற விஷயமாய் ஒரு வியாசமும் எழுதிவருவதாக ஒப்புக்கொண்டார்கள்.

---

### திருச்செங்கோடு உபாத்தியாயர் சங்கம்.

---

சென்ற ஆகஸ்டுமீ 27உ திருச்செங்கோடு லோயர் சகண்டெரி பாடசாலையில் ஷை சங்கம் கூடப்பட்டது.

ஆஜராயிருந்தவர்கள் :—

1. ஷை பாடசாலை உபாத்தியாயர்கள்.
2. திருச்செங்கோடு தாலுகா பாடசாலைகளின் சூப்ரவைசர்.
3. திருச்செங்கோட்டிலிருக்கும் ரிஸல்ட் பாடசாலை உபாத்தியாயர்கள்.
4. திருச்செங்கோடு லோயர் சகெண்டெரி பாடசாலை உயர்ந்த வகுப்புகளின் மாணுக்கர்கள்.

அச்சமயத்தில் ஷை பாடசாலை தலைமை உபாத்தியாயர் ம-ா-ா-ஸ்ரீ, வி. எஸ். சுவாமிநாத அய்யரவர்கள்.

தேகசுகத்திற்கு மிகுதியும் அவசியமாயிருக்கும் சுத்த ஆகாயத்தைப்பற்றி ஒருபந்யாசம் செய்தனர் பிறகு சங்கம்கலைந்தது.

அரங்கசாமி அய்யங்கார்,
காரியதரிசி.

---

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

---

### "ஸம்ஸாரம் ஸாகரம் துக்கம்."

---

மரங்கள் நெருங்கி அடர்ந்து கரேலென்று காரிருளொப்ப இருண்டிருந்த ஒரு பெரிய அடவியில் ஒரு ஏழை மனிதன் கந்தல் துணியும், சோர்ந்தமுகமுமாய் பசியால் தள்ளாடி வரும் நடையுடன் கூடி சென்றுகொண்டிருந்தான். காற்றோ விரைக்க விரைக்க மிகு பலமாய் வீசியடித்தது. இக்கொரேக்கொண்டல் போதாதென்று அவ்வேழை மனிதனுக்கு பசியும் அனல்போலெழுந்தது. காட்டுமிருகங்களோ அகோர சப்தத்துடன் ஊளையிட்டன. என்செய்கிற்பான்? அவ்வேழை மனிதன்? அப்போது தன்க்குள் தானே புலம்புகிறான். என்னெனில் "ஓ! சர்வஜீவதயாபரக்கடவுளே! யான் இங்ஙனம் வருந்துவதும் நீதியாமோ உன்சித்தத்திற்கு? கல்லைப்பெண்ணாக மாற்றிய நினக்கு கருணையுமிலதோ" "ஆதிமூலமேயென்ற யானையை ரக்ஷித்த சோதிபரம் பொருளே எனக்கருளே! யான் என் செய்வேன்! காசிவிஸ்வேசா இதுவும் உன்னருளோ! உன்னைச் சொல்லக் குற்றமென்ன? "ஐங்காதம் போனாலும் தன்பாவம் தன்னோடே" யென்றபடி என் கஷ்டதசையை யான் அனுபவிக்கப்பிறந்ததும், யான் படாதபாடுபட்டு எல்லாவற்றையுமிழந்து திண்டாடித் தவித்து இங்ஙனம் செல்ல வைத்ததும் நினது திருவிளையாடலன்றோ?" என்று தாபந்திரியப்பட்டுத் தயங்கினவனுய் செல்லுழி அங்கே ஓர் பெரும் புலியானது சர, சரவெனப் புதரினின்றும் வெளிக்கிளம்பி இவனைத்துரத்த ஆரம்பித்தது

இவன் அதைக்கண்டு உளறியடித்துக்கொண்டு தன் உயிரைப் பாதுகாத்துக்கொள்ள, அருகிலிருந்த மரத்திலேறி தொத்தி மேலே செல்ல, அங்கே யொரு பாம்பு இவன் காலைச்சுற்றிக் கொண்டது. இந்தஸ்திதியில் அவன் ஏறியகிளை யும் ஒடிந்து விழுகிறாற்போல விருக்கிறது. "என்ன செய்வேன் சர்வேசா! ஒரு வழியும் தோற்றவில்லையே" எனக்கண்களில் நீர்சொரிய, மேலே அண்ணாந்து நோக்கினான் அவிடம் உள்ளதேன் கூட்டிலுள்ள ஈக்கள் இவனைச்கொத்திப்பிடுங்க, இரண்டு மூன்று தேன் துளிகள் சொட்சொட்டென்று இவன் வாயில்விழுந்தது. அதை இந்தப்பேதைமனிதன் வெகுருசியாய்ச் சப்பிக்கொண்டிருக்கையில், காற்றும் பிரசண்டமாருதம்போல் வீசத்தலைப்பட்டது. சூரியனும் மறைந்தனன், மரக்கிளையும் படாரென முறிந்தது. பாம்பும் ஈக்களும் பறந்தோடின. புலி வாயிலடித்துக்கொண்டு சென்றது கடைசியில் அம்மனிதனுடைய் துக்கமெல்லாம் ஓரே தூக்கமாக முடிந்தது.

ஆ என் சகோதரர்களே! இப்படியேதான் இருக்கிறது இவ்வுலகமும். இக்கதையின் சாராம்சம் என்னவென ஆராய்வோம்? அப்புலி தான் நமது காலத்தைக்கணக்கிட்டு தீர்க்கவுடன் கொண்டு செல்லும் "காலதூதன்" என்பது. அப்பாம்பு எப்படி அம்மனிதன் காலைச்சுற்றியதோ அது போலவே கர்மவினையினாலுண்டான சம்சாரம் நம்மைப் பிடிக்கிறது.

"தந்தைதாய் தமர்தார மகவெனுமிவையெலாம்
சந்தையிற்கூட்டமிலோ"

என்றபடி சந்தையிற் கூட்டமாகிய சம்சாரம் அந்தப் பாம்பையொத்ததே. அவ்வடர்ந்த காடுதான் மாயையாகும் இவ்வுலகம். சுற்றியுள்ள ஈக்களோ பிடுங்கித்தின்னும் பந்துமித்திரர்களாவர். மரமோ இவனிருக்கும் நிலைமையாகும். அத்தேன்துளிதான் இவன் அனுபவிக்கும் சிற்றின்பமெனப்பட்ட நிலையற்ற இன்பமாம். இத்தனை ஆபத்துள் திண்டாடி அபேக்ஷிக்கும் அந்நிலையற்ற அச்சிற்றின்பத்திற்கு ஆசைப்படுவதால் வரும் வினைகளைக் கண்டீர்களா?

"தூங்கையிலே வாங்குகிற மூச்சு-அது
தூங்கிவாங்கையிலே சுழிமாறிப் போனாலும் போச்சு
பாங்கான திருநாளுண்டாச்சு
இங்கேபல பேர்கூடியே கதைபேசலாச்சு"

என்றபடி இன்றோ, நாளையோ, அல்லது என்றோ வாழ்நாள்முடியும், இச்சின்னாட்களுக்குள் அற்ப இன்பத்தைக் கருதாது பத்திமேற்கொண்டு "நித்தியமாய் நிர்மலமாய் நிஷ்களமாய் நிராமயமாய் நிறைவாய் நீங்காச் சுத்தமுமாய்" உள்ள பெறற்கரிய சாயுஜ்ஜியத்தை யடையுமாறு "புத்தியாலறி யொண்ணாப் புராணனைப்பத்தியாம் வலையிற்படுத்து" பேரின்ப சச்சிதாநந்த நிமல ஊற்றில் நீந்தி விளையாட நாமனைவோரும் முயற்சித்து சென்றடையவழி தேடுவதே நம்முடைய கடமையாகும். சுபம்.

"அன்பே யென்னரசே திருவம்பலத்தாரமுதே
யென்பே யுள்ளுருகக்கலந் தென்னுளிருந்தவனே
யின்பே யென்னறிவே பரமே சிவமே யெனவே
யுன் பேரோதுகின்றே னெனக்குண்மையுரைத்
தருளே,"

சே. எஸ். வைத்தியனாதய்யர்.

---

VOL. X.] SEPTEMBER, 1901. [No. 5.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.




Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minim um Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.





[ Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-8.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: VANI VILAS, TRIPLICANE.

PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO., POPHAM HOUSE, BROADWAY.

## Notice to Subscribers.

Subscribers to the Viveka Chintamani are earnestly requested to remit their subscriptions in advance before 30th June. All subscriptions that remain unpaid after that date will be collected at the usual rate of Rs. 4.

## சந்தாதாரர்களுக்கு அறிக்கை.

சந்தாதாரர்கள் எல்லோரும் ஜுன்மீ 30உக்குள் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேணுமென்று கேட்டுக்கொள்கிறோம். அத்தேதியிலிருந்து பாக்கிநிற்கும் சந்தாக்கள் வழக்கமாயுள்ள ரூ. 4 விகிதம் வசூல் செய்யப்படும். முன்பணமனுப்பத் தாமதிப்பதால் பத்திரிகை வெளியாவதும் தாமதப்படுவதால் எல்லோரும் சந்தாவை முன்பணமாகவே அனுப்பிவிடவேணுமாய் மிக வற்[illegible]கிக் கேட்டுக்கொள்கிறோம்.

அ. ப. ஏஜன்ஸி,
காரியதரிசி.